

**யா ஸ்ரீ: ஸ்வயம் ஸுக்ருதினாம் பவனேஷ்வ லக்ஷ்மீ:**

**பாபாத்மனாம் க்ருததியாம் ஹ்ருதியேஷு புத்தி:**

**ச்ரத்தா ஸதாம்குல ஜன—ப்ரபவஸ்ய லஜ்ஜா**

**தாம் த்வாம் நதா: ஸம—பரிபாலய தேவி விச்வம் ||**

*புண்ணியவான்களுடைய வீடுகளில் ஸ்ரீதேவியாகவும், பாவிகளுடைய வீடுகளில் மூதேவியாகவும், திருந்திய மனமுள்ள மதியுடையவர்களின் உள்ளத்தில் புத்தியாகவும், நல்லோர்களிடமும் சிரத்தையாகவும், நற்குலத்துதித்தோரிடம் வெட்கமாகவும் எவள் விளங்குகிறாளோ அவளேயாகிய உன்னை வணங்குகிறோம். நீயே உலகனைத்தும் காத்தருள வேண்டும்.*

*— தேவீ மஹாத்மியம் (அத்யாயம் 4)*

நவம்பர், 1986

# ஸப்தகிரி

இதழ் 6 மலர் 17

தனிப்பிரதி ரூ 1 வருடச் சந்தா ரூ. 12

## உள்ளுறை



**அட்டைப்பட விளக்கம்**

முனனட்டையில் : தீபாவளி சித்திரம்.
ஓவியர் : மா. ஸ்ரீ.

2-வது திருமலை பிரமமோறசவத்தின்போது ஆந்திர முதல்வா திரு. என். டி. ராமாராவ் அவர்கள்.

3-வது புதிய தி. தி தே. பொறுப்பாண்மைக் குழுவினர் பதவிப் பிரமாணம் எடுத்துக் கொள்ளுதல

பின்னட்டையில் : பிரம்மோறசவத்தினபோது இரவு மின் விளககு அலங்காரத்தில் திருமலைக் கோயில்.

*சிறப்பாசிரியர்*
திரு. எஸ். லக்ஷ்மிநாராயண I.A.S,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

*அச்சிடுபவர்*
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளா,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

*ஆசிரியர்*
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

*துணையாசிரியர்:*
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு :
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

மனிதர்கள உருவததால், நிறத்தால் மாறுபடுகின்றார்கள். அவர்கள், கொண்ட மனத்தாலும், கொள்ளும் உணர்ச்சியாலும் மாறுபடுகிறார்கள் என்பதை, அவர்கள் வெளிக்காட்டும் செயல்களைக் கொண்டு அறிகின்றோம். மகிழ்ச்சியோ துனபமோ அவற்றை வெளிக்காட்டும் முறைகளிலும் ஒருவன் மற்றொருவனிடமிருந்து மாறுபட்டுத் தெரிகின்றான். மாறுபாடுகளும் வேறுபாடுகளும் கொண்டு விளங்கும் மனிதர்கள் தங்கள் மனத்தில் அன்பு, அடக்கம், தூய்மை, நேர்மை, தியாகம் போன்ற அரும்பண்புகளைப் பெற்று வளர்த்துக்கொள்ள எந்த வேறுபாடுகளும் குறுக்கே தடைகளாகவோ, இடையூறுகளாகவோ இருக்காது என்பதைக் காட்டத்தான், நமது சமயம் நமக்குப் பல பண்டிகைகளை நாம் கொண்டாட வழி வகுத்துள்ளது.

ஒவ்வொரு இந்து சமயப் பண்டிகையும் தனக்கெனத் தனித்தன்மைகளுடன் தங்களுக்குள் வேறுபட்டு விளங்குகின்றன. தெருக்களில் காணப்படும் வண்ணக்கோலங்களும், பூசணிப்பூக்களும், தப்பட்டை ஒலிகளும், பக்தி கோஷங்களும் 'பொங்கலை' தெரிவிக்க, புத்தாடை சல சலப்பும, பஞ்சாங்க ஸ்ரவண ஒலியும் புத்தாண்டை வரவேற்க, முட்டாள்களின் மூலப்பொருளாக அவ்வப்போது அழைக்கப்படும் 'களிமண்' வருடத்தில் ஒரு நாள் தெய்வ நிலை எய்துதலும், நகரத்துக் கால்நடைகளே பார்த்திராத பல காட்டுத் தாவரங்கள் நாட்டுச் சாலைகளை அலங்கரித்தலும 'பிள்ளையார் சதுர்த்தி'க்கு பொலிவூட்ட, கலைஞனின் கைவண்ணமும், பாவையரின் குரல் வண்ணமும் போட்டியிட, எட்டு முதல் எட்டு முழம் வரை விடுவிட்டு, தெரு பறந்து சுண்டலுக்காகத் தண்டல் மேற்கொள்ளும் மாதர் கூட்டத்தின் சலசலப்பும், சக்தி கோயில்களிலிருந்து கத்தி வெளிவரும் அம்மன் பாடல்களின் எதிரொலியும் 'நவராத்திரி'யை இனங்காட்ட, குப்பத்து குடிசை முதல் மூன்றடுக்கு வாசம் வரை யாவரும் ஓரிரு வினாடி செயற்கை வெளிச்சத்திலே தங்களுடைய இயற்கை துன்ப இருளை மறக்கும் வகையில் திகழும் வெடிசசத்தங்களும், இன்பத்தை மட்டுமே காண விழையும் (புது) மாப்பிள்ளைகளும், துன்பத்திலும் இன்பத்தைக் காண முயறசிக்கும் மாமனார்களும, இன்பமும் துன்பமும் கலந்த ஒரு கலவையில் 'தலை தீபாவளி' நாயகிகளும் 'தீபாவளி'க்கு அழகூட்ட விழாக்கள் விளங்குகின்றன.

இப்பண்டிகைகளைக் கொண்டாடும் ஒழுகு முறைகளில் மட்டுமே நாம் மூழ்கித் திளைக்கின்றோமே தவிர—அன்று காணும் அந்த நாள் மகிழ்ச்சியில் மட்டுமே திருப்தி அடைகின்றோமே தவிர-அவை காட்டும் உண்மைகளை அறிந்தோமில்லை; அறிய விருப்பம் கொண்டோம் இல்லை. ஆசாரங்களை மட்டுமே முக்கியமாகக் கொளளாமல், அவை உணர்த்தும் அணித்தரமான வாழக்கை ரகசியங்களைத தெரிந்து கொண்டிருந்தால், இன்று நாட்டில் வன்முறைகள் அன்றாட நிகழ்ச்சிகளாக இருந்திருக்கா. போர்முனைக்கு ஏந்த வேண்டிய ஆயுதங்களை இன்று பல இளைஞர்கள் கொலைக்கும் கொள்ளைக்கும் பயன்படுத்தும் நிலை கொடுமையினும் கொடுமை. இதனைவிட ஆபத்தானது, பெண்மை ஆராதிக்கப்பட்ட இந்த நாட்டில் பெண்கள் பிராணத்திற்கும், மானத்திற்கும் அஞ்சி வாழும் அவலம். பெண்மையை அவமதித்த எந்த இடமும் பெருமை பெற்றது இல்லை. பெண்களைச் சிறுமைப்படுத்தியவரும், சிறுமை செய்த இடமும் பூண்டோடு அழிக்கப்பட்டன. இதனைத்தான் நாடு தழுவிய சமய விழாக்களில் முக்யமான, பெண்மையை ஆராதிக்கப்படும் விழாக்களான நவராத்திரியும் தீபாவளியும் விளக்குகின்றன. பூமியில் வன்முறை தலை விரித்தாடும் போதும், பெண்மைக்குக் களங்கம் விளைவிக்க முயற்சித்த போதும், அங்குப் பெண்மையின் உண்மை உருவம், பெண்மையின் பங்கு என்ன என்பதை மகிஷனைக் கொன்ற சக்தியின் வீரத்தைக் காட்டும் நவராத்திரி கூறுகின்றது. அதே போன்று ஒரு ஆணின் வெற்றி தோல்வி பெண்மையின் துணைக்கொண்டே பேசப் பெறுகின்றது என்பதைக் காட்ட - பெண்ணின் பெருமை கூற-நாட்டிற்கு ஒரு நரகமாக விளங்கிய நரகாசுரனை அழித்த பணியில் சத்யபாமை கொண்ட பங்கினை விளக்கும் 'தீபாவளி' அமைகின்றது. நேர்மையும் தூய்மையும் கெடும்போது பெண்மை அங்கு சாட்சியாக இருக்காது. அவற்றின் வெற்றிக்கு வழிகோலும் காட்சியாக விளங்கும். தீபாவளி அன்று மட்டுமே ஊரெல்லாம் கேட்கப்பட்டு மகிழ்ச்சியின் அடையாளமாகத திகழும் வெடிச் சத்தம் இன்று நாள் தோறும் நாட்டின் பல இடங்களில் சோகத்தின் எதிரொலியாக மாறியிருப்பது. வன்முறைகளின் விபரீதத்தை விளக்குகிறது. பெண்மையை ஆராதிக்கும் நவராத்திரியையும், தீபாவளியையும் கொண்டாடிக கொண்டே, பெண்களை காமத்திற்கும், வரதட்சணைக்கும் பலியாக்குவது வேதனைக்குரியது. அன்று யுகத்திற்கு ஒரு வில்லனாகத்தான் இராவணனும், மகிஷனும், நரகனும் தோன்றினர். ஆனால் இன்று நாட்டிற்கும், ஊருக்கும், ஏன் வீட்டிற்கும் ஒன்று என்ற கணக்கில் மனதாலும், செயலாலும் நம்மிடையே எததனை அசுரர்கள்? கொண்டவனே கொள்ளைக்காரனாக மாற, வந்தவளை மருமகளாக ஏற்க வேண்டிய மாமனே கம்சனாக அமைய, தானும் ஒரு பெண் என்பதை மறந்து தாயாகத் திகழ வேண்டிய மாமியே பழி தீர்க்கும் வகையில் மந்தரையாக விளங்க இன்றைய நிலை நம்மை தலை குனிய வைக்கின்றது. பொறுமையே பெண்மையின் பெருமையாகும். அதனையே அவளுடைய பலவீனமாகக் கொண்டு மனிதன மிருகமாக மாறினால், அப்பலவீனமே அவளுடைய பலமாக உருமாறி, ஆண்மையினைக் கேலிக்குரியதாக்கும். இதனைத்தான் புராணங்களும், சரித்திரமும், இன்று ஆங்காங்கு நடைபெறும் நிகழ்ச்சிகளும் நமக்குக்கூறும் பாடமாகும்.

எதிர்வரும் தீபாவளித் திருநாளன்று, அப்பண்டிகை உண்டு உறங்கவே தோன்றியது என்று கொள்ளாது, நரகாசுரனே நாணும அளவு நாம் நமது சிந்தனையையும் செயலையும் தாழவிட்டுக் கொள்ளாது, பெற்றவளுக்குப் பாசமும் கைப்பற்றியவளுக்கு அன்பும் காட்டி,குடும்பம் எனும் வாழை மரம் தழைத்தோங்கிட ஒவ்வொரு தனி மனிதனும் முயற்சித்தானாகில் அது நம்மை நாமே திருத்திக்கொள்ள ஒரு வாய்ப்பாக அமையும்.

# ✠ செய்திச் சுருக்கம் ✠

**புதிய பொறுப்பாண்மைக் குழு :**

8-10-86 அன்று திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் புதிய பொறுப் பாண்மைக் குழு திரு. டி. சீதா ராமய்யா அவர்களின் தலைமையில் அமைக்கப்பட்டது. அன்று தலைவர் மற்றும் சில உறுப்பினர்களின் பதவிப் பிரமாணம், ஆந்திர மாநில அற நிலையத்துறை ஆணையர் திரு. என். எதிராஜராவ் அவர்களின் முன்னிலை யில் தி. தி. தே. செயலாட்சித் தலை வர் திரு. எஸ். லக்ஷ்மிநாராயணா அவர்களால்செய்து வைக்கப்பட்டது. இப்பொறுப்பாண்மைக் குழு உறுப் பினர்களாகப் பின்வரும் நபர்கள் நிய மிக்கப்பட்டுள்ளனர். திருவாளர்கள் ஜி. சாம்பசிவராவ், ஜி. நாகிரெட்டி, சி. ஆனந்தராவ், ஐ. எல். என். சாஸ் திரி, டாக்டர். என். தேவநாதன் (சென்னை) பி. ராமசந்திர ராஜு, உண்ட்ரு கிருஷ்ணாராவ், சிம்மாத்ரி சத்ய நாராயணாராவ், மற்றும் எல்.வி. ராமய்யா (சென்னை). அறநிலைய ஆணையர் (ஆ.பி.) எம். கே. ஆர். வினயக் ஐ. ஏ. எஸ். அவர்கள் அலு வல் சார்பு உறுப்பினராக விளங்கு வார்.

**பிரம்மோற்சவ வருமானம் :**

அண்மையில் நடைபெற்ற இவ் வாண்டு திருமலை பிரம்மோற்சவ நாட்களின் போது தி.தி.தே.மேலாண் மைக்குக் கிடைத்த வருமானம் ரூ. 95,45,403 ஆகும். உண்டி மூலமாக ரூ. 52,08,868-ம், ஆர்ஜித சேவை களின் மூலம் ரூ. 19,11,120-ம்,லட்டு விற்பனை மூலம் ரூ. 24,29,415-ம் கிடைத்த தொகை மேற்குறிப்பிட்ட மொத்தத் தொகையினுள் அடங்கும். சென்ற ஆண்டு பிரம்மோற்சவ வரு மானம் ரூ. 47,09,000 ஆகும். இந் நாட்களின்போது 3,03,462 யாத்திரி கர்கள் பேருந்து மூலம் திருமலைக்கு வருகை புரிந்ததால், பேருந்துக் கட் டணமாக ஆந்திர மாநில பேருந்து போக்குவரத்திற்குக் கிடைத்தத் தொகை ரூ. 13,93,000 ஆகும். இப் பிரம்மோற்சவத்தின் போது திரு மலைக்கு ஐந்து லட்சத்திற்கும் மேலான யாத்திரிகர்கள் வருகை புரிந்தனர்.

**புதிய நியமனம் :**

ஆந்திரமாநில அரசில் தலைமை கண் காணிப்புப் பொறியாளராக (சாலை மற்றும் கட்டிடம்) பணியாற்றும் திரு. ஸ்ரீநிவாசசர்மா அவர்கள் 8-10-86 முதற்கொண்டு தி. தி. தே. தலைமைப் பொறியாளராக (பிரதி நிதி முறையில்) நியமிக்கப்பட்டுள் ளார்.

**பாட்னாவில் திருமண மண்டபம் :**

மேற்கு பாட்னா நகரில் தி. தி. தேவஸ்தானம் ரூ. 40 இலட்சம் செல வில் திருமண மண்டபம் ஒன்று விரை வில் கட்டுவதாக உள்ளது. இதற் காக, அம்மாநிலம் 2.3 ஏக்கர் மனை ஒன்றினை வழங்கியுள்ளது. இத்திரு மண மண்டபம் தி. தி. தே. தகவலறி விப்பு நிலையம் மற்றும் பக்திப்பாடல் களின் நூலகமாகவும் செயற்படும்.

**திருமலையில் முக்கிய பிரமுகர்கள் :**

அண்மையில் கர்நாடக மாநில ஆளு நர் திரு. அசோக் மெஹ்தா அவர்கள் தன் குடும்பத்தாருடன் திருமலைக்கு வருகை புரிந்து வெள்ளியன்று நடை பெறும் அபிஷேக சேவையில் பங் கேற்றார். ஆந்திர மாநில உயர்நீதி மன்ற நீதிபதிகள் திரு. ரகுவீர், ஸ்ரீராமுலு மற்றும் தமிழ்நாடு உயர் நீதி மன்ற நீதிபதி திரு. வேங்கட சுவாமி ஆகியோர் திருமலைக்கு வருகை புரிந்தனர். தமிழ்நாடு தொழில் அமைச்சர் திரு. ராஜாராம் அவர்களும் திருமலைக்கு வருகை புரிந்து சுப்ரபாத சேவையில் பங் கேற்றார்.

**மற்றைய செய்திகள் :**

தி. தி. தேவஸ்தான தோட்டத் துறை தொழிலாளிகளுக்கு இவ் வாண்டு முதல் காலணிகளை வழங்க மேலாண்மை தீர்மானித்துள்ளது.

திருமலையில் திருமதி. பங்கஜம்மா அவர்களால் நன்கொடையாக அளிக்கப்பட இருக்கும் பெருந்தேவி தோட்டத்தில் உள்ள நாயுடு கட்டி டத்தை தி. தி. தே. ஏற்றுக்கொள்வ தென்று தீர்மானிக்கப்பட்டுள்ளது.

புதுதில்லி ஸ்ரீ ஆதிசங்கர விமான மண்டப குழுவினர்க்குத் திருமலைக் கோயிலில் பயன்படுத்தப்பட்ட மூல வரின் சேஷவஸ்த்ரம் (மேல் சட்டை) மதிப்பு ரூ. 7,500/- மற்றும் உத்திரீ யம் (மதிப்பு ரூ 420/-) ஆகியவற்றை வழங்க மேலாணமை அனுமதியளித் துள்ளது அதே போன்று செங்கை மாவட்டம் ஸ்ரீ பெரும்புதூரில் உள்ள ஸ்ரீ ஆதிகேசவ பெருமாள் மற்றும் ஸ்ரீ பாஷ்யகார சுவாமி கோயி லுக்கு ரூ. 8000/- பெறுமான பயன்படுத்தப்பட்ட திருமலை மூல வரின் சேஷ வஸ்தரம் ஒன்றினை வழங் கவும் மேலாண்மை அனுமதி அளித்துள்ளது.

★

# நற்றவர்கள் கொண்டாடும் கலி

ஸ்ரீ பராசர முனிவர் தமது நித்யானுஷ்டானங்களை முடித்துக் கொண்டு வீற்றிருந்தசமயம், ஸ்ரீமைத்ரேய முனிவர் எழுந்தருளினர். பரஸ்பரம் உபசரிப்புகள், குசலப் பிரச்னங்கள் முடிந்த பிறகு, ஸ்ரீபராசர முனிவர் ஸ்ரீமைத்ரேய முனிவரை நோக்கி, "தாங்கள் அடியவனுடைய குடிலுக்கு எழுந்தருளின வியாஜம் யாதோ! அதை அடியேனுக்கு அருளிச் செய்ய வேணும்" என்று வினவினர்.

ஸ்ரீ மைத்ரேய முனிவரும், ஸ்ரீபராசர முனிவருக்குச் சாஷ்டாங்க ப்ரணமம் செய்து, பின்வருமாறு பிரார்த்திக்கலானர்.

"அடியேனின் குருநாதரே! அடியேன் ஸகல வேதங்களையும், ஸகல தரும சாஸ்திரங்களையும், வேதாகமங்களையும் தங்களிடமிருந்தவ்லவா கற்றறிந்தேன். இருப்பினும் நான்கு பாதங்களினல் நடக்கின்ற தருமம், அழிந்து விடத்தக்கதான கலியுகத்தின் சொரூபத்தையும், கலியுக தருமங்களையும் அடியேன்பால் கிருபை கூர்ந்து மிக நன்ருக விளக்கியருள வேணும்" என்று பவ்வியமாகப் பிரார்த்தித்தார்.

ஸ்ரீ பராசர முனிவரும் பேரர உகந்தருளி, ஸ்ரீமைத்ரேய முனிவரை நோக்கி, "மைத்ரேயரே, கலியினுடைய ஸ்வரூபத்தை நன்ருக விளக்கிக் கூறுகிறேன் கேட்பீராக!" என்று கூறலானர்.

[ஸ்ரீ பராசர முனிவர் கூறியவற்றுள் சில முக்கிய அம்சங்களை மட்டும் காண்போம் நாம்]

(1) "தருமம் எத்தனைக் கெத்தனை இழிவானதாகிறதோ, அத்தனைக் கத்தனை கலியுகம் விருத்தியாயிற்று என்று ஸாதுககள் தெரிநது கொள்வார்கள்."

(2) "எப்பொழுது பாஷாண்டாகள் அதிகமாகி வேதம் வல்லாா களான பரமபாகவதோத்தமர்களுக்கு தீங்குகள் நேரிடுகின்றனவோ, அப்போது கலி முதிர்ந்து இருக்கிறது என்று தெரிந்துகொள்ள வேண்டும்."

(3) "எப்பொழுது யக்ஞங்களுக்கு ஈசுவரனை ஸ்ரீஹரியை மக்கள் யக்ஞங்களினல் ஆராதிப்பதில்லையோ, வேத வாக்கியங்களில் நாட்டமும், பிரதியும் இன்றி, பாஷாணடிகளின் இச்சை உண்டாகுமோ, அப்போது கலி மகா பலம் பொருந்தி இருக்கிறுன் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும்."

"இத்தகைய கலி பலத்தினல் உலகமானது வேதாத்தியயனம், யாகம், பிதுர் பூஜை, தேவ பூஜை இவைகளினின்று தர்மத்தை ஒளியச் செய்யும். இத்தகைய கலியுகத்தில் எவனுவது ஒருவன் அற்பமான தர்மத்திற்கு முயற்சி செய்வானுகில், அவன் கிருதயுகத்தில் பெருந்தவஞ் செய்து எத்தகைய புண்ணியத்தை அடைவானே அவ்வளவு புண்ணியத்தை எளிதில் அடைவான்."

"இதற்கு மாபெரும் ஞானியான ஸ்ரீவேதவியாசரும் கலிவிஷயத்தில் ஒரு விசேஷத்தைச் சொல்லியிருக்கிருர். அதையும் அடியேன் தங்களுக்குச் சொல்லுகிறேன். தாங்கள் கேட்பீராக" என்று கூறி விருத்தாந்தத்தைக் கூறுகிருர்.

முன் ஒருகாலத்தில் மனிதர்களுக்கு மேன்மை அளிக்கும் பொருளை அறிய விரும்பும் ஸாதுக்களான ரிஷிகளின் ஸபை, கங்கையின் மணல் திட்டில் கூடியது. அப்பொழுது அவர்களிடையே ஒரு புண்ணிய வாதம் உணடாயிற்று. அதாவது,

(1) "எநதக காலத்தில் கொஞ்சம் தருமம் செய்தாலும், பயன் அதிகமாகக் கிடைக்கும?"

(2) "எவர் எடபடிப்பட்ட தருமத்தை எளிதில் செய்வதற்கு உரியவர்கள்?"

என்ற சர்ச்சை அப்பொழுது உணடாயிற்று. எனவே இந்த விஷயத்தைப் பற்றி சந்தேகம் நீங்கி உண்மையை அறிநது கொள்வதற்காக மகரிஷிகள் அனைவரும், ஸ்ரீ வேத வியாசரின் ஆசிரமத்தை நோக்கிச் சென்றுர்கள.

---

**ஸ்ரீ கோவிந்தராஜ பவஞசார்யா ஸ்வாமி**

ஸ்ரீரங்கம்.

---

அப்பொழுது என் மகனை வேத வியாசர் கங்கை நதியிலே நீராடிக கொணடிருந்தார். அதனல் அந்த மகரிஷிகள் அவர் நீராடி விட்டுவரும் வரையில் அவரை எதிர்பார்த்துக கொணடு கரையோரமாக இருந்த மரங்களின் நிழல்களில் உட்கார்ந்திருந்தனா. அப்பொழுது கங்கா தீர்த்தத்தில மூழ்கிக்குளித்துககொண்டிருந்த என்குமாரர் முழுக்குலிருந்து எழுந்து, "சூத்திரன் ஸாது; கலிஸாது" என்று சந்தேகம் தெளிவு பெற வந்த மகரிஷிகளின் காதுகளில் கேட்கும் படியாகச் சொல்லிவிட்டு, மீண்டும் தீர்த்தத்தில் மூழ்கினர். பிறகு அவர் எழுந்து, "ஸாது, ஸாது சூத்திரா! நீ மஹா புண்ணியவானுக இருக்கிருய்?" என்று சொன்னர்.

மறுபடிபடியும் மூழ்கியெழுந்த வியாசர், "பெண்களே புண்ணியவதிகள்! அவர்களை விடப் புண்ணிய

# திருமலைத் தெய்வம் - தரிசனச் சிறப்பு

உலகிலுள்ள ஏழு அறபுதங்களில் திருப்பதியும் ஒன்று எனலாம். உலகிலுள்ள மக்களின் வினைகளையெலலாம் தீர்க்கிற பரந்தாமனின் மலை இது. கருணை விளையும் ஞானமலை ஏழு பிறப்புகள் கடந்தால் பரம பதம் கிடைக்கும் என்பது ஐதீகம்."அது தேவையில்லை. என் ஏழுமலைகளைக் கடந்து வந்தாலே உனக்குப் பரமானந்தமான பதம் உண்டு" என்று கூறும் எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் அற்புதானந்த-பேரின்ப-திருமலைகள் அந்த ஏழும்.

"ஏழ்மையைக் கடக்க முடியவில்லையா? உன்னைக் காக்க இந்த ஏழு மலை கொண்ட நான் இருக்கிறேன்" என்று அந்தத் திருவேங்கடத்தான் எழுந்து நிற்கிற மலைகள் அவை. கூடாரை வெல்லும் சீர்கோவிந்தன் குடி கொண்டிருக்கும் அந்தத் திருமலைகளின் அடிவாரத்தில் நின்று பிரமிக்கிறோம்.

சேஷாசலம், வேதாசலம், கருடாசலம், விருஷாத்திரி, அஞ்சனாத்திரி, அனந்தகிரி, வெங்கடாசலம் — என்றெல்லாம் நாமங் கொண்ட அந்தத் திருமலையின் அடிவாரத்தின் அருகே நிற்கும்போது எண்ணூறு ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்த ஓர் அற்புதக் காட்சி நினைவிற்கு வருகிறது.

ஸ்ரீ உடையவர் என்னும் வைணவ ஆசாரியப் பெருமானான இராமானுஜர் அந்த மலையேறிய காட்சியாகும் அது. இராமானுஜர் தம் சீடர் பரிவாரங்களுடன் முதிய வயதில் வெங்கடேசுவரப் பெருமானைத் தரிசிக்கச் சென்றார். பெருமாளின் திருமலையில் கால் வைத்து நடக்கக் கூடாது என்று, 'கோவிந்தா! கோவிந்தா' என்று அந்த திருமலையெங்கும் எதிரொலிக்க நாமாவளியுடன் மண்டியிட்டே மலையேறினார் என்பர்.

திருமலைத் தரிசனத்தில் ஒவ்வொரு மனிதனின வாழ்வின் இலட்சியம் கனிந்து விட்டதைப் போல்—ஜன்மாவே கடைத்தேறி விட்டதைப் போல்—இனி அவனைத் தவிர உலகில் வேறு எதுவுமே நமக்கு வேண்டாம் என்பதைப் போல் மனமுருகித் தரிசிக்கின்றனர்.

குலசேகராழ்வாரும் நம்மாழ்வாரும் நெஞ்சுருகத் துதித்து வேண்டியதைப் போல் நம் நெஞ்சமும் திருமலைத் தரிசனத்தால் துதிக்கிறது.

'பெருமானே! சதா உன் பவளவாயையே பார்த்துக் கொண்டிருக்கிற மாதிரி, உன் ஆலய வாசற்படியாய்க் கிடக்கும் வரமாவது எனக்குத் தாராயோ! உன் தெய்விகத் திருமலையில் ஒரு செடியாய், கொடியாய் பிறக்கும் பேறுவது அருளாயோ! உன் தீர்த்தத்தில் ஒரு மீனாய்ப் பிறக்க வரம் தருவாயா?

அலர்மேல் மங்கை அகலாது உறையும் திருமார்பா! ஆழிமழைக் கண்ணா! அடியார் வினை தீர்க்கும் அருமருந்தே! திருவேங்கடத்தெம் பெருமானே, நொடிப் பொழுதும் நினைப் பிரியாது அடியேன் உன் பாதம் அகலாதிருக்க அருள்வாயா!

திருவேங்கடவன் திருவடி வாழ்க.

குமாரி ஏ. சாந்தி — உடுமலைப்பேட்டை.

முடையவர்கள் யார்தான இருக்கிறார்கள்?" என்று சொன்னார். பிறகு அவர் நன்றாக மூழ்கிக் குளித்து விட்டு சந்தியா வந்தனம் முதலான சகல அனுஷ்டாங்களையும் முடித்து விட்டு வீற்றிருந்த சமயம், மகரிஷிகள் வியாசரிடம் வந்து அவரை நமஸ்காரம் செய்தனர்.

"பெரியோர்களே உங்கள் வரவால் மகிழ்ச்சி அடைகிறேன். என்ன காரியம் பற்றி இங்கு வந்திருக்கிறீர்கள்?" என்று கேட்டார் வியாசர். "வேத வியாசரே! தங்களிடம் ஒரு சந்தேகத்தைத் தெளிவுபடுத்திக் கொள்ளும் எணணத்தோடு வந்துள்ளோம். அதற்கு முன்னதாக மற்றொரு விஷயத்தை அறிய விரும்புகிறோம். 'கலி ஸாது' என்றும், 'சூத்திரன் ஸாது' என்றும் 'பெண்கள் புண்ணியசாலிகள்' என்றும், 'அவர்களைக் காட்டிலும் புண்ணியவானகள் இல்லை' என்றும சற்று முன்பு சொன்னீர்களே. அதை எங்களுக்கு விளக்கிக்கூற வேணடும். அதன் பின்னர் எங்கள் சந்தேகத்தைத் தெரியப்படுத்துகிறோம்" என்றனர் மகரிஷிகள். அவர்கள் வார்த்தைகளைக் கேட்டு மெல்லச் சிரித்தபடி வியாசர் சொன்னார்.

கலி ஸாது (விவரணம்) :

"முனிவர்களே! கிருதயுகத்திலே எந்தப் புண்ணியம் பத்து வருஷங்களால் சித்திக்குமோ அது திரேதா யுகத்தில் ஒரு வருஷத்தில் சித்திக்கும். துவாபரயுகத்திலோ அது ஒரு மாதத்திலே சித்திக்கும். கலியுகததிலோ அது ஒரு நாளில் கைகூடும். தவத்தினாலோ, பிரமசரியத்தினாலோ, ஜபம் முதலியவற்றினாலோ பெறும் புண்ணியத்தை மற்ற மூன்று யுகங்களில் அடைவதைக் காட்டிலும், கலியுகத்தில் மிகவும் எளிதில் அடைந்து விடலாம். ஆகவே கலி ஸாது என்றேன்."

"கிருத யுகத்திலே யோகத்திலே யோக நிஷ்டையிலிருந்து பெறும் பலனை, திரேதாயுகத்தில் யாகம் செய்வதால் அடையலாம். துவாபரயுகத்

தில் பகவானை அர்ச்சிப்பதால் அடையலாம். கலியில் பகவானுடைய நாம சங்கீர்த்தனத்தினாலேயே அடைந்து விடலாம். கலியுகத்திலே மனிதர்கள் அதிக சிரமமின்றி தருமத்தின் மிகுதியான பலனை அடைந்து விடுகிறார்கள் ''

சூத்திரன் ஸாது (விவரணம்) :

"பிராம்மணர்கள விரதம், அனுஷ்டானங்களில் தவறாமல் இருந்து கொண்டு முதலாவதாக வேதங்களை அத்தியயனம் செய்யவேண்டும். பிறகு தரும வழியால் சம்பாதித்தப் பொருளைக் கொண்டு யாகங்களைச் செய்ய வேண்டும். பிராமணாதியருக்குப் பகவானைப் பற்றிய பேச்சுக்களைத தவிர, வீண பேச்சுக்களைப் பேசுவதும், பகவானுக்குச் சமர்ப்பிக்காத அன்னாதிகளைப் புசிப்பதும், டம்பத்துக்கும், லாபத்துக்கும யாகங்களைச் செய்வதும் பாதகமாகும். ஆகையால் அவர்கள் எப்போதும் மனம், வாக்குக காயங்களைக் கட்டுப்படுத்திக் கொண்டிருக்க வேணும். மேலும் பிராமணர்களுக்கு எதையும் விதிப்படிச் செய்யாமற் போனால் அது குற்றமாகும். போஜனாதிகளைக்கூட இஷ்டப்படிச் செய்யவொண்ணாமல் விதிப்படிச் செய்யவேண்டியவையாக இருப்பதால் யாவுமே அவர்களுக்குப் பராதீனமானவை. அதனால் அவர்கள் எதையும் மிகவும் வருந்தித் தாங்கள் அடையவேண்டியஉலகங்களைஜெயிக்க வேண்டும்.

சூத்திரனோ வேதஅத்தியயனம், அக்கினி யக்ஞம் முதலியவைகளின்றி, பாகயக்ஞாதிகாரமுடையவனாய், முந்திய பிராமணாதியருக்குப் பணிவிடை செய்வதனாலேயே அத்தகைய உத்தம உலகங்களை அடைந்துவிட முடிகிறது. ஆகையால் அவனைவிட புண்ணியவான் யார் உண்டு? சூத்திரனுக்கு இன்னது உண்ணத் தக்கது; இன்னது உண்ணத் தகாதது, இது குடிக்கத் தக்கது; இது குடிக்கத் தகாதது என்ற நியமம் இல்லாமையால் 'சூத்திரன் ஸாது' என்றேன்.''

பெண்கள் புண்ணியவதிகள்(விவரணம்):

ஆடவர்கள தத்தமக்குரிய தருமத்தினால் பொருள் சம்பாதிக்க வேண்டும். சம்பாதித்தப் பொருளை நல்லவைகளுக்குச் செலவு செய்ய வேண்டும். நல்லவர்களுக்குச் செலவு செய்ய வேண்டும். இவ்விதமாகப் பொருளை ஈட்டுவதிலும், அதைச் சம்பாதிப்பதிலும் எவ்வளவு பிரயாசைகள் இருக்கின்றன பாருங்கள். இதை நல்ல வழியில் செலவழிப்பதிலோ இரட்டிப்புச் சிரமம் இருக்கிறது. இவ்விதமான பலவகைக கிலேசங்களினால் ஆடவர்கள் பிரஜாபத்தியம் முதலிய உலகங்களை வெல்கிறார்கள். பெண்களோ மனோவாக்கு காயங்களினாலே தம் கணவர்களுக்கு அநுகூலமாக இருந்து கொண்டு சிசுருஷைகளைச் செய்து வந்தாலே, கணவன் அடையும் உலகங்களை எளிதில் அடைந்து விடுகிறார்கள். இவ்விதம் அதிகச் சிரமம் இல்லாமல், வருந்திப் பெறும் உலகங்களைப் பெறுவதால் மூன்றாவதாகப் 'பெண்கள் ஸாதுக்கள்' என்றேன் ''

"மஹர்ஷிகளே! அடியேன் சொன்னவற்றுக்கெல்லாம் காரணங்களைச் சொன்னேன. இனி தாங்கள் எல்லோரும் வந்த காரியத்தைச் சொல்ல வேணும். அதற்கும் பதில் சொல்லுகிறேன்'' என்றார் வியாசர்.

"முனி சிரேஷ்டரே! நாஙகள் கேட்க வந்த சந்தேகங்கள் இப்போது தாங்கள் கூறிய விளக்கவுரைகளிலேயே அடங்கியுள்ளன. இனி நாங்கள் கேட்க வேண்டியவை வேறில்லை'' என்றனர் மஹர்ஷிகள்.

பிறகு, ஸ்ரீவேத வியாசர் சிரித்து, "அடியேன் திவ்விய ஞானத்தால், தாங்கள் எல்லோரும் வந்த காரியத்தை முன்கூட்டியே அறிந்து, அதைக் குறித்துத்தான் "கலி ஸாது; சூத்திரன் ஸாது, பெண்கள் புண்ணியவதிகள்'' என்று சொன்னேன். அற்ப முயற்சியிலேயே கலியில் தருமம் பலிக்கிறது. தயை, சாந்தி, முதலான ஆன்மீகக் குணங்களாகிய தண்ணீரினால் அவர்கள் பாவங்களாகிய மலங்களைக் கழுவிக் கொள்கிறார்கள். சூத்திரர் பிராமணாதியருக்குப்பணிவிடை செய்வதினாலேயே பேறு பெறுகின்றனர். பெண்டிரும் கணவருக்குப் பணிவிடை செய்து, ஆயாசம் இல்லாமலேயே நற்கதியை அடைகிறார்கள். ஆகையால் இந்த மூவரும் புண்ணியசாலிகள் என்பது என் கருத்து. கிருத யுகாதி காலங்களிலும், அந்தணர் முதலியோருக்குத் தர்மம் சம்பாதிப்பதில் பெரிய ஆயாசமுள்ளது. இதைப்பற்றி அடியேன் பேசியதில் தங்களுடைய சந்தேகம் தீர்ந்தது அல்லவா? இனி அடியேன் தங்கள் எல்லோருக்கும் செய்ய வேண்டுவது என்ன?'' என்று கேட்க, சந்தேகம் தெளிவு பெற வந்த மஹர்ஷிகள், சந்தேகம் நீங்கிய மகிழ்ச்சியோடு, ஸ்ரீ வேதவியாச முனிவரை மிகவும் கொண்டாடி, நமஸ்காரம் செய்து விட்டு,விடைபெற்றுச் சென்றார்கள்'' என்ற ரஸமான விருத்தாந்தத்தைக் கூறிய ஸ்ரீபராசர முனிவர் மைத்ரேயரை நோக்கி,

"மைத்ரேயரே! இந்த இரகசியத்தை நான் உமக்குச் சொன்னேன். மிகவும் துஷ்டனான கலி புருஷனுக்கு இத்தகைய பெருங்குணமும் இருக்கிறது'' என்று கூறி கலியை மிகவும் கொண்டாடினார்.



# அத்தத்தின் பத்தாம் நாள் தோன்றிய அச்சுதன்

பஞ்சபாண்டவர் தூதனை கண்ண பிரானின் திருஅவதார நக்ஷத்ரம் எது என்று கேட்டால் சமய அறிவு படைத்த சிறு குழந்தை கூட ஆவணி மாதத்து ரோகிணி என்று சிறிதும் தயங்காமல் சொல்லிவிடும். ஏனென்றால் ஒவ்வொரு வருடமும் தம் இல்லந்தேடி வர வேண்டும் என்பதற்காக அந்தி வேளையில் கண்ணனின் காலடிச் சுவடுகளை வண்ணக்கோல இழைகளால் பதித்தும், இளஞ்சிங்கமாகிய கண்ணன் தின்ன வேண்டும் என்பதற்காகப் பல இனிப்பு வகைகளைச் செய்து வைத்தும் காத்திருக்கும் தமது பெற்றோர்களையும் உற்றார்களையும் பார்த்திருக்கும் குழந்தையது.

இது இப்படித் தெள்ளத் தெளிவாக அனைவருக்கும் தெரிந்திருக்க, ஒரு ஆச்சரியமான செய்தியைப் பெரியாழ்வார் தம் திருமொழியில் கூறி இருப்பது மிகுந்த வியப்பை அளிக்கும் விதத்தில் அமைந்திருக்கிறது.

அது என்னவென்று அறிய வேண்டிய ஆர்வம் உடனடியாகப் பிறக்கிறது அல்லவா? கண்ணனின் திருவவதாரச் சிறப்பைப் பத்து பருவங்களாகப் பிரித்துப் பாடுகிறார் பெரியாழ்வார். அத்திருமொழியில் கண்ணன் பிறந்ததைக் குறிக்கும் ஆழ்வார், 'அத்தத்தின் பத்தாம் நாள் தோன்றிய அச்சுதன்' என்று போற்றிப் பாடுகின்றார்.

அத்தம் என்ற தமிழ்ச்சொல் 'ஹஸ்தம்' என்ற நட்சத்திரத்தைக் குறிப்பதாகும். ஹஸ்த நட்சத்திரத்திலின்றும் பத்து நாட்கள் தள்ளிக் கணக்கிட்டால் அது திருவோண நட்சத்திரத்தைக் குறிக்கும்.

அப்படியென்றால் பெரியாழ்வாரின் கணக்கின்படி கண்ணனின் பிறந்த நாள் திருவோணம்தானா?

மேலோட்டமாகப் பார்க்கும் எவர்க்கும் அப்படித்தான் தோன்றும். பெரியாழ்வார் தம் பாட்டில் ஏதோ மயங்கி விட்டார் என்று கூட எண்ணத் தோன்றும். ஆனால் பட்டர் பிரானின் திருவுள்ளத்தை அறிய அவரது ஆழ்ந்த அனுபவ வாயிலாகவே நாமும் செல்வோமாயின் அவரது சூட்சுமமான அறிவுத் திறனை யாரும் வியந்து பாராட்டாமல் இருக்க முடியாது. இப்போது அவர் வழியில் செல்வோமா?

கலியுகத்தில் தோன்றிய பெரியாழ்வார் துவாபர யுகத்தில் அவதரித்த கண்ணனைப் பாட எண்ணியதும் தாமும் துவாபர யுகத்துக்கே சென்று விடுகிறார். அது மட்டுமல்ல; தன்னைக் கண்ணனைப் பெற்று வளர்த்த தாயான யசோதையாகவும் பாவித்துக் கொள்கிறார்.

பிறந்த குழந்தை கண்ணனின் தாய் மாமனை கம்ஸன் அரசாட்சி செய்யும் காலமது. தம் சகோதரியான வாசுதேவகிக்குப் பிறக்கும் குழந்தையினால் தம் உயிருக்கு ஆபத்து என்ற அசரீரியைக் கேட்டு வசுதேவகி பெற்றெடுக்கும் அனைத்துக் குழந்தைகளையும் கொல்லச் செய்து வரும் கம்ஸனிடமிருந்து மாயமயக்குக்கள் காட்டி யசோதையின் மகனாக ஆயர்பாடியில் தோன்றுகிறான் அச்சுதன் கண்ணன்.

கண்ணனின் தாயான யசோதையாகத் தன்னைப் பாவித்துக் கொள்ளும் பெரியாழ்வார், பேதைக் குழவிக்கு எந்தவிதத் தீங்கும் யாராலும் ஏற்பட்டு விடக்கூடாதே என்று பயந்து ஏங்குகிறார்.

கண்ணன் கேசவன் நம்பி பிறந்தான் என்பதை அறிந்து,

'உறியை முற்றத்து உருட்டி நின்றாடுவார்
நறுநெய் பால்தயிர் நன்றாகத் தூவுவார்,
செறிமென் கூந்தல் அவிழத் திளைத்து
எங்கும் அறிவழிந்தனர்' ஆய்ப்பாடி ஆயர்கள்.

மற்றும் சில ஆய்ச்சிகள் ஒல்லை விரைந்து வந்து கண்ணன் திருமுற்றத்தை அடைந்தனர்.

பிறந்த குழந்தையைப் பார்க்க வருபவர்கள், குழந்தை எந்த நட்சத்திரத்தில் பிறந்தது என்று கேட்பது உலக இயல்பு. சாதாரணமாகவே உலக இயல்பு இவ்வாறு இருக்க 'பாயசீருடைப் பண்புடைப் பாலகனை' கண்ணனின் பிறந்த நட்சத்திரத்தை அறிய யார்தான் ஆவலில்லாமல் இருப்பர்?

கண்ணனின் நட்சத்திரத்தை அறிய விரும்பிய ஆயர்கள், 'ஆமாம், யசோதாய், இக்குழந்தையின் நட்சத்திரம் என்ன?' என்று ஆர்வம் ததும்பக் கேட்டார்கள் இப்போது தான் தாய் விழித்துக் கொள்கிறாள். 'ரோகிணி' நட்சத்திரம் என்று சொன்னால் கம்ஸன் உடனே வந்து கண்ணனைக் கொன்று விடுவான் என்று க்ஷண நேரத்தில் உணர்கிறாள். மின்னலென அவள் மனதில் ஒரு யுக்தி தோன்றுகிறது. பொய்யும் சொல்லக் கூடாது என்று தீர்மானித்து 'அத்தத்தின் பத்தாம் நாள் தோன்றிய அச்சுதன்' என்று கூறுகிறார்கள்.

உலக இயல்புப்படி நட்சத்திரங்களைத் தொடர்ச்சியாக எண்ணுவது தானே வழக்கம்? அவ்வாறு எண்ணிக் கொண்ட ஆய்ச்சியாயர்கள் அத்தத்தின் பத்தாம் நாள் திருவோணம் என்று கணக்கு செய்து, 'திருவோணத்தானா இவன்? என்னே பாக்கியம்? திருவோணத்தான் உலகாளும் என்பார்களே' என்று வியந்து செல்கின்றனர்.

யசோதைத் தாயான பெரியாழ்வாரும் ஒரு வழியாகத் தப்பித்தோம் என்று மகிழ்ந்து குழந்தையை உச்சி மோந்து முத்தமிட்டுக் கொண்டாடுகிறார்.

அத்தத்தின்றும் பின்னிட்டுப் பத்து நாள் கணக்கிட்டுப் பார்த்தால் அது கண்ணனின் நிஜமான அவதார நட்சத்திரமான 'ரோகிணி' நன்னாள் என்பதைக் கம்ஸனோ, ஆயர் ஆய்ச்சிகளோ அறியார். யசோதை நங்கையும் நாமுமே அறிவோம். 'என்னே யசோதைத் தாயான பெரியாழ்வாரின் அறிவுத் திறன்' என்று வியந்து பாராட்டுவோம். ★

திரு. T. T. வரதராஜன்,
சென்னை-29.

இவ்வையத்தில் வாழ்வாங்கு வாழும் வாழ்க்கை நெறியின் தத்துவங்களை ஈரடிக் குறள் மூலம் ஈந்தவர் செந்நாப்போதர். வாழ்க்கை நியதியில் உள்ள கடிய, எளிய உண்மைகளை, ஒரு தத்துவமேதையின் கண்ணோட்டத்தில் ஆய்ந்து அருளியுள்ளார் வள்ளுவர். நட்பாயினும், துறவாயினும், அருளாயினும், அன்பாயினும் இவரது காட்சிக்கு உட்பட்டு, உயிர் பெற்று உலவுகின்றதே!

அந்த வகையில் இம்மைக்கும், மறுமைக்கும் பற்றாக இருக்கும் ஊழ் அல்லது விதி பற்றி தெய்வப் புலவர் விளம்புவதைக் காண்போமா?

'ஊழ்' எனுந் தலைப்பில் விதியின் விளையாட்டுகளைப் பத்துக் குறள்களில் பட்டியல் போடுகின்றார்.

நீங்கள் என்னதான் 'நான நிறையப் படித்தவன்; உலக மொழியின் அத்தனை இலக்கியங்களையும் கற்றுத் துறை போகியவன்' என்று மார்தட்டிக் கொண்டாலும்—

"எல்லாவற்றையும் கரைத்துக் குடித்த பண்டிதா. உன்னை விதி எனும் மாயவன் வந்து அலைக் கழிக்கும் நேரத்தில் நீ படித்த நூல் எதுவும் கை கொடுக்காது. இயல்பாக உனக்குள்ள அறிவுதான் சித்தி ரஸ்து" என்று தலையில் தட்டி உட்கார வைக்கிறார்.

'நுண்ணிய நூல் பல கறபினும் மற்றுந்தன்
உண்மை அறிவே மிகும்.'

அடுத்த குறளில் ஊழின் அடிப்படையில் உலகத்தையே இரு பிரிவுகளாகப் பிரிக்கிறார், பொய்யா மொழிப் புலவர்.

# ஊழிற் பெருவலி...

'ஆகூழால் தோன்றும் அசைவின்மை கைப்பொருள்
போகூழால் தோன்றும் மடி'

"ஒருவனுக்குக் கைப்பொருள் கிடைப்பதற்குக் காரணமான ஊழால், சோர்வில்லாத முயற்சி உண்டாகும். ஆனால் அதே பொருள் போவதற்குக் காரணமான ஊழ்வலியாலோ சோம்பல்தான் வந்து அடையும்" என்ற கருத்தில்தான் எத்தனைச் செறிவு! எத்தனை உண்மை!

மற்றொரு தெளிவுரையும் தருகின்றார்: "ஒருவனுக்கு எல்லா அறிவும் உளவாயினும் கைப்பொருள் இழப்பதற்குக் காரணமாகிய ஊழ் வந்த இடத்து அஃது அவனைப் பேதையாக்கும்; அப்படியின்றி முன்பே அவன் அறிவு சுருங்கியதாயிருப்பினும் விதி நன்றாக அமைந்து பொருளும் கிட்டினால் அவ்அறிவே அவனுக்குப் பெருகி நன்மை பயக்கும்" ஆஹா! தான் ஒரு த்ரிகால ஞானி என உணர்த்தி விடுகிறாரே.

"உலகத்து ஊழினால் ஆய இயற்கை இரண்டு கூறு. அவைதாம் நல்வினை, தீவினை. ஆதலால் செல்வம் உடையவர் என்பது வேறு; அறிவு உடையவர் என்பது வேறு" எனுங்கருத்தை நோக்குங்கால்—

"சேர்ந்தே இருப்பது?"
வறுமையும், புலமையும்

"சேராதிருப்பது?"
அறிவும் பணமும்

என்ற வசனம் நம் நினைவில் எட்டிப் பார்க்கிறதே!

நம்மிடையே ஒரு வழக்கு உண்டு. 'உண்மையாய் உழைத்துச் சம்பாதித்த பொருளே ஒட்டும்; இல்லாதவர்களைத் துன்புறுத்தி அபகரித்த பொருள வந்த வழியே போய் விடும்' என்பது.

இக்கருத்தையே தமிழ் திருவள்ளுவனார் 'கள்ளாமை' எனும் அதிகாரத்தில்,

'களவினால் ஆகிய ஆக்கம் அளவிறந்து
ஆவது போலக் கெடும்'

என எச்சரிக்கிறார். அத்துடன் நின்றாரா? இங்கே 'ஊழ்' கீழும் ஒரு முறை உணர்த்திப் போகிறார். என்னை?

"ஊழால் உனக்கு உரியவை அல்லாத பொருள்களை எவ்வளவுதான் வருந்திக் காப்பாற்றினாலும் அவை நில்லாமல் போகும். ஆனால் உனக்கு உரியவற்றையே நீ வேண்டாம் என்று குப்பையில் இட்டாலும் அது மீண்டும் உன்னையே சேரும்" இதைக் கேட்டதும் 'அப்பாடா' என ஆறுதலாக இல்லை...? தொடர்ந்து புலவர், நல்வினை தீவினை பற்றி அறிவுறுத்தி விட்டு இறுதியில் ஓர் ஆயுதத்தைப் பிரயோகிக்கிறார். அது—

'ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான் முந்துறும்'

என்பது.

"ஆயிரந்தான் நீ அறிவு ஜீவியாக இருக்கலாமப்பா! அத்தனைப் பண்டிதர்களும் உன் புலமைக்கு அடிபணிவதாகத்தான் இருக்கட்டுமே. 'விதி' எனும் மாபெரும் வ்ருக்ஷத்தின் கரங்களுக்குமுன் உன்னால் ஒன்றும் அசைக்க முடியாது" என்று சுட்டு விரலைக் காட்டும்போது நாம் அனுஷ்டிப்பது மௌனம்.

'விதியை மதியால் வெல்வதெல்லாம் வெறும் பேச்சு. நீ ஒரு கணக்குப் போட்டு வைத்தால் காலம் உனக்கு முன்பே தன் கடமையை முடித்திருக்கும்' என்று வள்ளுவம் கூறும் உண்மை சிலர்க்குக் கசக்கும்.

**ஆள்வினை :**

ஊழின் லீலா விநோதங்களைக் கண்டோம். இனி அந்த ஊழையும்

நடராஜர் வி திருமகன்,
பாண்டிச்சேரி

மீறிச் செயலாற்றும் மனித முயற்சிகளை, மாதானுபங்கி மூலமே காண்போம்.

'அருமை உடைத்தென்று அசாவாமை
வேண்டும்
பெருமை முயற்சி தரும்'

"நாம இக்காரியத்தை முடிப்பது கஷ்டம்; பேசாமல கைவிட்டு விடுவதே சிரேஷ்டம்' என்று உன முயற்சியில் தளர்நது போகாதே. ஒரு வேளை விதி உனக்குச் சாதகமாக இருக்கலாம். அந்தச் செயல சுலபமாக முடிந்து விடலாம். ஆயின் அப்போது நீ மேறகொள்ளும் முயற்சி இருக்கிறதே, அதுதான் உனக்குப் பெருமை தரும்".

ஓ! ஊழின் பயத்தால் ஒடுங்கியிருக்கும் மனிதனை, மெல்ல உசுப்பி விடுகிறாரோ? அடுத்து என்ன கூறுகிறார்..?

"இந்த உலகத்தில் உனக்கென்று சில கடமைகள் உணடு. அதனைச் செய்யாமல் தப்பிக்கப் பார்த்தாயோ... அவ்வளவுதான். பிறகு உலகம் உன்னைக் கைவிட்டு விடும். மூலையில் ஒதுககித் தன் போக்கில் போய்விடும. ஆகையால் விதியை நம்பித் தொழிலில் ஈடுபடாமலிருக்காதே!" என்று அவர் கூறும் ஆலோசனை இக்காலத்தையும் பிரதி பலிக்கிறதன்றோ?

'தாளாண்மை என்னுந் தகைமைக்
கண் தங்கிற்றே
வேளாண்மை என்னுஞ் செருக்கு'

'தாளாண்மை இல்லாதான்
வேளாண்மை பேடிகை
வாளாணமை போலக் கெடும்'

எனுங்குறள்கள் முறையே பிறர்க்கு உதவி செய்தலால் கிடைக்கும் மேம்பட்ட நிலைமையையும், முயற்சி இல்லாத பேடி கையில் உளள வாளின பயனில்லாத் தன்மையையும் காட்டுவன.

பின்வரும் 'முயற்சி திருவினையாக்கும்' குறட்பாவிலும் "முயற்சி ஒருவனுக்குச் செல்வத்தைப் பெருகச் செய்யும்; விதியை எண்ணி முயற்சி இல்லாது முடங்குவது அவனுககுத் தீராத வறுமையையே தரும்" என பவர் கையோடு இன்னொரு செய்தியையும் அறிவிக்கின்றார்.

"விதியின் சதியாட்டத்தில் மயங்கி நீ சோம்பல் கொணடாயோ தீர்ந்தாய்! பிறகு கரிய மூதேவி தான் உன் இல்லம் ஆள்வாள். சோம்பல் இல்லாதவனுடைய முயற்சியில்தான் அழகிய திருமகள் குடிபுகுகின்றாள்"

பார்த்தீர்களா... எத்தனை வாஸ்தவமான பேச்சு!

"ஒன்று மட்டும் சொல்கிறேன். 'நம் தலைவிதி. நன்மையே நடக்க மாட்டேனென்கிறது' என்று ஒருவன் அலுத்துக் கொள்வதில் தவறில்லை தான. ஆனால் அதே நல்லூழ் வந்து உன் வாசலைத் தட்டுகையில் கூட நீ அப்படியே முயறசியற்றுச் சோம்பியிருந்தால்—அதுதான் உனக்குத் தீராத பழி" எனும் கூற்றை உணர்க!

'தெய்வத்தான் ஆகாதெனினும்
முயறசி தன்
மெய்வருத்தக் கூலி தரும்"

எனும் அடிகள் அகிலப் பிரசித்தமாயிற்றே!

உலகப் பொதுமறை தநத வள்ளுவனார் முதலில் 'ஊழ்' எனுந் தலைப்பில் பத்துக குறட்பாவாலும் நம்மைப் படிப்படியே பயமுறுத்தி இறுதியில் 'ஊழிற் பெருவலி யாவுள' எனறு ஓரே போடாகப் போட்டுச் சென்றார்.

பின்னர் அவரே அழும் குழந்தைக்கு ஆறுதல் சொல்வது போல் 'ஆள்வினை உடைமை'யில் 'முயன்றால் முடியாததில்லை' எனத்தேற்றுகிறார். இறுதியில் இயம்பப்படும் அடிகள்:

'ஊழையும உப்பககம் காண்பர்
உலைவின்றித
தாழாது உஞற்றுபவர்'

"அனபனே! விதி வலிதுதான், வெல்ல முடியாததுதான்; ஒப்புக் கொள்கிறேன். ஆனால் அந்த ஊழையும் உன் இடைவிடாத முயற்சியால் உப்பக்கம் துரத்தி விடலாமே. காலம் கருதி எதையும் மேற்கொணடால் இந்த ஞாலமே உன் வசநதான். போ!" என்று தட்டிக் கொடுக்கிறது வள்ளுவச் சித்திரம்.

அந்த வாக்குதான் தமக்கு 'டானிக்'.

"ஓதறகு எளிதாய் உணாதற்கு அரிதாகி
வேதப் பொருளாய் மிக விளங்கித
தீதற்றோர்
உள்ளுதொறு உள்ளுதொறு உள்ளம்
உருக்குமே
வளளுவர் வாய்மொழி மாணபு."



## எப்போது பெறுவது?

மனிதர்கள் எப்போது புனிதமடைகிறார்கள்? தெய்வீக நிலையைப் பெறுகிறார்கள்? மோட்ச சாம்ராஜ்யத்திலிருக்கும் கடவுளிடம் ஈடுபாடு கொள்வதால் மட்டும் அந்நிலை மனிதர்களுக்குக் கிடைத்து விடுமா? மனிதனுக்குள்ளேயேயிருக்கும் கடவுளை உணாந்து அக்கடவுளிடம் ஒருவன் ஈடுபாடு கொள்ளும்போது மட்டுமே புனிதம் பெறுகிறான். தெய்வீக நிலையைப் பெறுகிறான்.

— பாகவதம.

அனுப்பியவர் : தேனி எம். சுப்பிரமணி.

# தெரிந்தும் தெரியாதன....

திரு ஏ. சுந்தரராஜன்
சென்னை

வைணவ ஆகம நூல்கள் 108 என்பர். அவை சங்கிதைகள், தந்திரங்கள் என்றும் கூறுவர். இவை அனைத்தையும் தொகுத்து பாஞ்சராத்திரங்கள் என்றும், பாகவத சாஸ்த்திரம் என்றும் கூறுவார்கள்.

பாகவதர்கள், சாத்வர்கள், ஏகாந்திகாகள என்று பலவாறு கூறப்பெறும் ஒரு நெறிய சித்தத்துடன் பகவானிடம் பக்தி செய்யும் அடியார்களை பாத்ம தந்திரம் பாஞ்சராத்திரிகர் என்று அழைககிறது. பாஞ்சராத்திர வழிபாடு ஏகயானம்-ஒரே வழி—என்று கூறப்படுகிறது. இது பாகவதர்கள் ஒரே கடவுள் வாதிகள் என்பதைக் குறிக்கும். ஐஸ்வரியம், வீரியம், கீர்த்தி, ஸ்ரீ, ஞானம், வைராக்யம் என்னும் ஆறு குணங்களுக்கும் "பகம்" என்று பெயர்; அவற்றை உடையவர் பகவான். பகவானே அவர்களுடைய வழிபடு தெய்வமாவார். ஆதலால் பகவானை வழிபடும் சாஸ்திரம் பாகவத சாஸ்த்திரம் என்னும் பெயர் பெறுவதாயிற்று. பகவானை வழிபடும் சமயம் பாகவத தருமம்.

இநத சாஸ்த்திரம் பண்டைக் காலத்திலேயே தோன்றியதாகக் கூறுவர். இதை வேதங்களின் சிகரம் என்று ஸ்ரீ பிரசன்ன சங்கிதையும், இதைப் பதரிகாஸ்ரமத்தில் ஸ்ரீமந் நாராயணனே நாரத முனிவருக்கு உபதேசித்தார் என்று ஈஸ்வர சங்கிதையும் கூறுகின்றன. பாஞ்சராத்திரம் வேதம் போல தொன்மையானது என்று ஸ்ரீவைஷ்ணவ ஆசாரியர்கள் கருதியுள்ளனர். ஆளவந்தார் பாஞ்ச ஆகமத்தின் தொன்மையையும் பிரமாணத்தையும் நிலை நாட்டுவதற்கென்று "ஆகம பிரமாணியம்" என்னும் நூலை எழுதினர். வேதாந்த தேசிகரும் அதே நோக்கத்துடன்தான் 'பாஞ்சராத்திர ரக்ஷை' என்னும் புலமைமிக்க நூலை இயற்றினர்.

ஆகமங்களுக்குப் பாஞ்சராத்திரம் என்ற பெயர் ஏற்பட்டதின் காரணம் விளங்கவில்லை. யோகம், சாங்கியம், பௌத்தம், ஆருகதம், பாசுபதம் ஆகிய ஐந்து நூல்களும் ஆகமங்களின் முனனிலையில் இருள்போல் தோன்றுவதால், ஆகமங்களுக்கு பாஞ்சராத்திரங்கள் என்னும் பெயர் உண்டாயிற்று என்று பாத்ம தந்திரம் கூறுகிறது. பஞ்ச-ஐந்து; ராத்திரம்-ஞானம். அதனல் பாஞ்சராத்திரம் என்பது ஐநது வகை ஞானங்களைக் கூறுவதாகும் என்று நாரத பாஞ்சராத்திரம் கூறுகிறது. அவித்யை ஒழிப்பதால், அதற்குப் பாஞ்சராத்திரம் என்று பிரமசங்கிதை கூறுகின்றது. பாஞ்சராத்ரிகர் நாள்தோறும் ஐந்துவித கர்மங்கள் செய்வதால் அவர்களுக்கு அந்தப் பெயர் உண்டாயிற்று என்பர்.

நாராயணன் பர, வியூக, விபவ, அந்தர்யாமி, அர்ச்சை என்னும் ஐந்து உருவஙகளில் தன்னை வெளிப்படுத்துகிறுன் என்பதே வைணவ ஆகமங்களின் முக்கியமான கொள்கையாயிருப்பதனல், பாஞ்சராத்திரம் என்பதும் பொருத்தமாய் உள்ளது என்பர்.

கடவுளை சூக்குமத்திலிருந்து தூலத்தில் வழிபடும் முறை பாஞ்சராத்திரத்தின் முறையாகும். பர, வியூக, விபவ நிலைகள் அண்டத்தில் பரம் பொருள் என்றும் மறைந்து நிற்கும் நிலைகளாகும். அந்தர்யாமிநிலை ஆன்மாவிடம் கோயில் கொண்டிருப்பது. அர்ச்சை நிலைதான் அடியார்கள் எளிதில் கணடு வணங்குதற்கு ஏற்ற நிலை. ஆதலால் அவதாரங்கள் அண்டத்திற்கும் பிண்டத்திற்கும் சம்பந்தமுடையன. கடவுள் பெரிதினும் பெரிதாயும், சிறிதினும் சிறிதாயும் இருக்கிறுர்.

இப்புராதனக் கொள்கையை அவ்வப்பொழுது தோன்றி உபதேசித்த ஆசாரியர்கள் பலராவார். ஜனகர், சாண்டிலியர், பிரகலாதர், சுக்கிரீவர், அனுமார், விபீஷணர், சடகோபர், ஸ்ரீராமானுஜர் ஆகியோரை சிறப்பாகக் குறிப்பிடுவர்.

பாஞ்சராத்திர ஆகமம் ஸ்ரீ வைஷ்ணவனுவதற்குரிய ஐநது சம்ஸ்காரங்களைக் கூறுகிறது. அவை;

1. பகவதம்ஸமான சுதர்ஸன-பாஞ்ச சன்னியங்களை தோள்களில் முத்திரித்துக் கொள்ளும் தாபம்;

2. நெற்றியிலும் நெஞ்சிலும் திருமண்ணும் ஸ்ரீ சூரணமும் கொண்டு அணிநது கொள்ளும் புண்ட்ரம்.

3. அடியான் என்பதைக் குறிக்கும் 'தாஸன்' என்னும் மொழியைத் தன் பெயருடன் இணைத்துக் கொள்ளுதல்.

4. ஆசாரியனுல் உபதேசிக்கப்படும் தெய்வ மந்திரம்—திருமந்திரம் என்னும் அஷ்டாக்ஷரி.

5. மேற்சொன்ன நான்கு புறச் சம்ஸ்காரங்களால், அவற்றின் பயனுக, தைலதாரை போல் ஈஸ்வரனிடம் இடைவிடாமல் ஐக்கியபட்டு நிற்கும் தியானநிலை.

எப்பொழுதும் ஈஸ்வர சந்நிதானத்தில் இருப்பதாக எண்ணி வாழ்வதற்கான வழியை வகுப்பதே இச் சமயக் கடன்களின் நோக்கம்.

ஸ்ரீ வைஷ்ணவ நெறியில் நிற்பதற்கு ஜாதி, ஆசிரமம், வழக்கம், பால் முதலிய வேற்றுமைகளின்றி

அனைவர்க்கும் உரிமை உண்டு என்று பாஞ்சராத்திர ஆகமங்கள் தெளிவு படுத்துகின்றன. அதனால் முக்தி நாடி வருபவர் அனைவரும மேற்சொன்ன பஞ்ச சம்ஸ்காரங்களையும் மேற் கொள்ளலாம், அவர்கள் எல்லோரும் சமமாகவே எணணப்படுவர் என்று ஈஸவர சம்ஹிதை கூறுகிறது.

பாகவதர்கள் நாள்தோறுமசெய்ய வேணடிய சரியைகளுக்குப் பஞ்சகலை எனறு பெயர். அவை அபி கமனம், உபாதானம், இஜ்யம், சுவாத் தியாயம், யோகம் என்று பாத்ம தந் திரம சரியை பாதம் என்னும் அத்தி யாயத்தில் கூறுகிறது. அபிகமனம் எனபதே நாள்தோறும் முதலில் செய்ய வேண்டிய சரியை. அது நீரா டலும் காலைப் பிரார்த்தனையும் ஆகும. உபாதானம் என்பது பாக வத கைங்கரியத்திற்காக உடலைக் காப்பதற்கு வேண்டிய அளவு உண வோ, பொருளோ தேடும் தொழில் செய்தல். வேவைக்கு மிஞ்சிய பொருளைப்பெறவும் வைத்துக்கொள் ளவும் மறுத்தாலகிய அபரிக்கிரகமும் இதனுள் அடங்கும். இஜ்யம் என்பது இல்லத்தில் பிரதிஷ்டை செய்துள்ள பெருமாளை நாள்தோறும் முறை தவறாது வணங்கும் முறை, சுவாத் தியாயம் என்பது வைணவ வேத சாஸத்திரங்களைப பக்தி சிரத் தையுடன் ஆராய்தல். யோகம் என் பது எந்நேரமும ஈஸ்வரத்யானம் செய்தல். இநதப் புணணிய கார்யங் களுக்காக ஒவ்வொரு நாளும் காலை முதல மாலை வரை ஐந்து பகுதிகளா கப் பிரிக்கப்படும். ஆகவே அபிக மனத்துடன் தொடங்கிய நாள் உறங் குமுன் தன்னைஈஸ்வரனிடம் பரிபூரண மாக ஒப்புவிக்கும் தியானத்துடன் முடிவடைகிறது.

வைகானஸ ஆகமம் கோயில் வழி பாட்டை மிக விரிவான முறையில் வகுத்துள்ளது. வைகானஸ முறைப் படி வழிபாடு செய்ய எல்லா ஸ்ரீ வைஷ்ணவாகளுககும உரிமை கிடையாது. எல்லோரும் இல்லங் களிலும கோயில்களிலும் பாஞ்சராத் திர முறைப்படி வழிபாடு செய்யவே உரிமை உடையவர்கள். விகனஸ முனிவரின் பரம்பரையில தோனறி யவர்களுக்காக அனுஷ்டிக்க தோன் றிய முறையே வைகானஸ ஆகமம்.

**ஆசார்ய ஹ்ருதயம் :**

அஷ்டாதச ரகசியம் அருளிச் செய்த பிள்ளை லோகாசாரியருடைய தம்பி அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் இயற்றியது. இந்நூல் நம் மாழ்வாருடைய பெருமை, அவர் அருளிய திருவாய்மொழி முதலிய நூல்கள் ஆகியவற்றின் பெருமை, அவற்றின் முக்கிய கருத்துக்கள் இவற்றை விளக்கும் நூல். பொது வாக நம்மாழ்வாருடைய திருவாய் மொழியில் உள்ள பலவகைக் கருத் துக்களையும் நம்மாழ்வாரின் மனநிலை யையும் ஆராய்ந்து கூறும சிறந்த ஆய்வு நூல்.

இந்நூல் நான்கு பகுதிகளாக உள் ளது. இதன் ஆசிரியர் பெரும் பாலும் ஆழ்வார் பாசுரங்களின் அடி களையும தொடாகளையும், இடை யிடையே தம்முடைய சில சொற் களைக் கொண்டு இணைத்து இந்நூலை அமைத்திருப்பது சிறப்பானது.

(தொடரும்)

# பகவானின் அவதாரங்கள்

பகவான் கரநதெங்கும பரந துளள, அதறகு மேறபட்டுமுளன். பகவானின முகயமான இரு வேத நாமஙகள் பரமாதமன, பரபரஹ்மம் என்பவை இவறறில பரமாதமன என்னும் பெயா பகவான் உலகெங் கும் வ்யாபித்திருப்பதையும, பரப் ரஹ்மம் என்பதுஅவனதுபரதவத்தை யும் அறிவிககின்றன. ஆயினும் எம் பெருமானின் வ்யாபகத்தைக காண்பிக்கும சில ச்ருதிகளே யும், அவனுக்கு ரூபம் கிடை யாது என்று கூறுவதாகத்



தோன்றும் வேறு சில வேத வாக்யங் களையும் ஆதாரமாகக் கொண்டு சில வேதாநதிகள் எமபெருமானுக்கு திவய மங்கள ரூபம, கலயாண குணங் கள, அலஙகாரமாகவுமிருககும் திவ் யாயுதஙகள், அழகிய திவய மஹிஷி கள, நித்யஸூரிகள், ஸ்ரீவைகுணடம் முதலானவை கிடையா என்று கூற மிகக ஆவலுள்ளவாகளாயிருக்கிருர் கள. ஆனால அவர்கள தஙகள் பக்ஷத் திற்கு விருத்தமாக அநேக வேத ப்ரமாணங்களிருப்பதைக் கணிசிக்க வில்லை. அவற்றைத் தம ஸாமர்த்யத் தினல் வேறு விதம் அர்த்தம் செய்ய முடியாது என்பதையும உணரவில்லை. இவவுணமையை பாஷ்யகாரர் ஸ்ரீ வேதார்த்த ஸங்கரஹத்தில் விஸ்தார மாக விளககியுள்ளாா. மேலும, ஸ்ரீ வைகுணட கத்யம, ஸ்ரீநயாய ஸித்தாஞ்ஜனம், ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரம், பரமபத ஸோபானம் முதலிய பூர்வாசார்யக்ரந்தஙகள் இவ்விஷ யத்தை மிகவும் தெளிவுபடுத்தியுள் ளன. ஸ்ரீவைகுணடத்திலுள்ள எம பெருமானின் அந்த திவ்யரூபமே அவதாரங்களின் அழியாத மூலவிதை என்று ஸ்ரீமத் பாகவதம (1-3-5) தெரிவிக்கிறது.

### அவதாரத்தின் பொருள் :

அவதாரம் என்பதறகு இறங்குதல என்று பொருள. எல்லையிலலாத கருணைக் கடலான பரம்பொருள் மானிட உலகில் நடையாடுவதே அவ தாரமாகும. தெய்வீகத்திற்கும மானிடததிற்குமுள்ள எல்லையைக் கடநது பூவுலகில் பகவான் இறங்கி வருவதே அவதாரமாகும் என்பது அரோபிந்தோவின் அர்த்த கர்பமான வாக்கு. ஆயினும் இதை ஒரு ப்ர தேசத்திலிருந்து மற்றொரு ப்ரதேசத் திற்கு வருவதாக எண்ணுதல் தவறு. இது ஓர் தெய்வீகச் செயலாகும். எம்பெருமானின் ஸ்ருஷ்டி என்பது உலகத்தைக் காப்பதற்காகத் தன்னைத் தான் அவன் படைத்துககொள்வதை யும் உட்கொள்ளும். ஆகவே, அவ தாரம் தயாளுவான எம்பெருமானின் காக்கும கருணையின் வ்யக்தமான அடையாளமாகும. அவதாரத்தில் ப்ரக்ருதியைக் கடந்த பகவான் ப்ரா க்ருத சரீரம் உள்ளவன போலும், பிறப்பிலியானவன் பிறப்பவன் போலும், மாறுதலற்றவன மாறு தலடைபவன் போலும், யாவரையும் அடக்கியாள்பவன் பிறரால (பக்த ரால்) அடக்கியாளப்படுபவன் போலும் காணப்படுவது, ஒன்றுக் கொன்று முரணானவை அபூர்வமாக இணங்கி நிற்கும் சேர்க்கையைக் காணபிக்கிறது. இநத சேராச் சோத்தி, முரணானவற்றை ஒனறு படுத்துவதில் ஸமர்த்தனான எம்பெரு மானிடம காண்பது ஓர் ஆசசர்ய மல்ல. இந்த சக்தியை நம்மாழ்வார் "நல்குரவும செலவும்" என்ற திரு வாய் மொழியில் பரக்க அருளியுள் ளார். எங்கும பரந்துள்ள எம்பெரு மானின் தன்மை தன்னிச்சையால் அவன் செயயும் அவதாரத்திற்கு எவ் விதத்திலும் இடரானதோ, எதி ரானதோ அன்று.

திரு. லா. ஸ்ரீநிவாஸன்,
புது தில்லி-5.

### அவதாரங்களைப் பற்றிய ப்ரமாணங்கள் :

அவதாரம் என்பது பிறகாலத்து கற்பனையல்ல. மூல ஹிந்துமதத்தின் மேல் தொற்ற வைக்கப்பட்ட ஓா ஒட்டலல. ஏனெனில் வேதங்களே இதைப்பற்றிப் பேசுகினறன. உதா ஹரணமாக யஜுர் அஷ்டகம் 3-6-3 இவவிதம ஓதுகிறது.

**यवा सुवासाः परिवीत आगात् स उ श्रेयान्**
**भवति जायमानः ।**

**तं धीराः कवय उन्नयन्ति स्वा धियो मनसा देवयन्तः ॥**

"யௌவன்ததையுடையவனுகவும், அழகிய பீதாம்பரத்தை தரித்தவனு கவும, நித்ய ஸூரிகளால புடைசூழப் பெறறவனுகவும பரமபுருஷன் இவ வுலகத்திற்கு வந்தான். அவன் பிறந்த பினபே மேன்மையடைகிருன். அவனே தீர்கதர்சிகளான முனிவாகள் த்யானத்தினமூலம அறிகின்றனர்."

இவவாக்யத்தில उ (உ) எனனும ஏகாரத்தைக் குறிக்கும பதம் மற்ற ஒவ்வொரு பததோடும சோத்து அர்ததத்தை வெவ்வேறு விதமாக வலியுறுத்தும் சகதி வாய்நதது

அதே போல காடகச்ருதி (3-9-55) பின்வருமாறு உள்ளது

**पिता पुत्रेण पितृमान् योनियोनौ नावेदन्ति मनुते त बृहन्तम् ।**

"ஸர்வலோக பிதாவானவன தன பக்தர்களிலொருவனேப பிதாவாகக் கொண்டு ஸர்வ யோனிகளிலும் பிறக் கிருன். வேதமறியாதவன அவனே பரமன் என்பதை அறியமாட்டான்."

இதையொட்டியே ஸ்ரீமத் வால் மீகி ராமாயணம (பால. 15-31) **पितरं रोचयामास तदा दशरथं नृपम् ।** என்றது. அதாவது தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்கி விஷ்ணு பக வான அப்போது (இராமாவதாரத் தில்) தசரதச் சக்ரவாததியைத் தன்து தகப்பனுக விருமபினுன

"தென்னிநதியாவின ஆழ்வார் கள்" என்னும நூலில டாக்டா. K.C. வரதாசசாரியாா அவதாரங்களைப பற்றி இவவிதம உரைக்கிருா:

"ருக்வேதம (4-1-7) பூ; புவ;, ஸுவ; எனறு மூன்று வித லோகங் களைப் பறறியும் மூன்றுவித பிறப்பு களைப்பற்றியும பேசுகிறது. மேலும 10-53-5ல் அதுவே ஜீவர்களின ஐந்து வித பிறப்புகளை உரைக்கிறது. இவை ஜீவன்கள் மேற்செல்வதையும் கீழ் இறங்குவதையும் (அதேபோல் பக வான் இறஙகுவதையும், அதாவது அவதாரம செய்வதையும்) காணபிக் கின்றன. உபநிஷத்துக்களில் காணும அநதாயாமித்வமும், பகவானே ஜீவன் தனனுள் அனுபவிபபதும் (ஈசோப நிஷதது) அவதார விஷயத்தை உணர்த்துவதாகும். கீதையில் நான காம் அத்யாயம் பகவான அவதாரம் செய்து ஸாது பரித்ராணம் செயது ஜீவர்களே மேல் நிலைக்கு உயர்தது வதை ஆசசர்யமாக விளக்கியுள்ளது. கடைசியாக, பாஞ்சராதரததில கூறி யுளள பகவானின் ஐநதுவித அவ தாரங்கள் பகவானுக்கும் ஜீவனுக்கு முளள எல்லா உறவுகளையும் ஒனறு படுத்துகிறது."

இவையெல்லாவற்றையும் கோா வையாக ஒரே பாசுரததில் (திருச் சந்த விருத்தம் 17) திருமழிசையாழ் வார் மிகத தெளிவாக அருளியுள் ளாா எ று அவா மேலும மொழிந் துளளாா.

தெயவததின் ஐந்து நிலைகள்:

மஹா நாராயணேபநிஷத இவ் விதம் ஓதுகிறது:

**स वा एष पुरुषः पञ्चधा पञ्चात्मा । येन सवमिदं प्रोतं पृथिवी चान्तरिक्षं च द्यौश्च दिशश्चावान्तरदिशश्च ।**

"எவனுல் பூமி, அந்தரிக்ஷம், ஆகா சம், திக்குகள், விதிககுகள் ஆகிய ஸகலமும வ்யாபிககப்பட்டிருக கிறதோ, அநத பரம புருஷன் ஐந்து வித ரூபங்களை உடையவன, ஐந்து வித அப்ராக்ருத வஸதுககளினுலான (பஞ்சோபநிஷத்திஞலான) திருமேனி யையுடையவன."

ஸ்ரீரஙக ராமாநுஜ முனிபாஷ்யம மேற்படி வாக்யம் பரம, வயூஹம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை எனற பகவானின ஐநது நிலைகளைக் குறிக் கிறது என்று தெளிவாக உரைக் கிறது. பரரூபததை உபநிஷத்துக் களும், வ்யூஹங்களைப் பாஞ்சராதர மும், விபவததை இதிஹாஸ புராணங களும், அந்தாயாமியை யோக சாஸ் திரமும், அர்ச்சையை திவ்ய ப்ரபந் தங்களும் முக்யமாக விவரிககின்றன. இந்த வெவ்வேறு ரூபஙகள வெவ் வேறு உபாஸகர்களுககாக ஏற்பட் டவை. முன கூறப்பட்டதைவிட பின கூறப்படும ரூபம அதிக ஸுலப மாக அடையக் கூடியது. இநத ரூபங் கள யாவும் ரஜஸ் தமஸகலசாத சுதத ஸத்வம் ஒனறே யாயினும, மேற் கூறிய உபநிஷத் வாக்யததில சொல் லப்பட்டுளள ஐநது தரவ்யங்கள் ப்ரக்ருதியின ப்ருதவீ, அப்பு, வாயு, தேஜஸ், ஆகாசம் ஆகிய பஞ்ச பூதங் களுக்கு எதிர் தட்டான பஞ்சோப நிஷத் என்று கூறப்படும் அப்ராக்ருத பஞ்ச பூதஙகளைக் குறிக்கும் (ஈடு 2-5-2, திருச்சந்த விருததம பெரிய வாச்சான் பிள்ளை வ்யாக்யானம் காணக).

அவதாரங்களில் எம்பெருமானின் கலயாண குணங்களுக்கு யாதொரு ஸஙகோசமும கிடையாது. ஐநது வித ரூபங்களிலும் பரமன திவ்ய மங் கள விக்ரஹத்திஞேடேயே விளஙகு கிருன். எல்லா நிலைகளிலும் பகவா னிடமிருந்து பிரியாமல் இருக்கிருள் மஹாலக்ஷ்மி. பகவானின் அவதாரம தோறும லக்ஷ்மீயும் அவதரிககிருள் எனறு ஸ்ரீ விஷ்ணு புராணம் (1-9-142/145) விளம்புகிறது. இந்த ஐநது ரூபங்களையும சுருஙக விளககும பரத்வாதி பஞ்சகம் என்ற நடாதூர் அம்மாளின் ச்லோகங்களைப் பெரி யோர் தினமும் அதிகாலையில் அநு ஸநதானம செய்வா.

பரம:

பகவான கேவலம் ஓர் வ்யாபிக்கும் தத்துவம மட்டுமல்ல; அதற்கு மேற் பட்ட பரம புருஷன, புருஷோத்த மன. ஆனந்தமும், அழகும், நிகரற்ற மேன்மையும், பெருமையும் பொருந்தி, ப்ரகருதி மணடலத்துக் கபபால், காலத்துக்கு வசப்படாத், பரம வ்யோமம் அல்லது ஸ்ரீவைகுண் டம என்று அழைக்கப்படும் ஸ்வயம் ப்ரகாசமான நித்ய விபூதியிலுள்ள அதிசயமான, ப்ரகாசம் பொருந்திய

பகவானின அடிபபடையான ரூபம தான பரம் அல்லது பரவாஸுதேவன எனறு கொணடாடப்படுகிறது. இவ வுருவில் எம்பெருமான ஜ்ஞானம, பலம், ஐச்வர்யம, வீர்யம், சக்தி, தேஜஸ் எனறு விவரிககப்படும ஷாட் குண்யததை இயறகையிலேயே பூரண மாக உடையவனுயிருக்கிருன். இவற் றிலிருந்தே பகவானின மற்ற அநந்த கல்யாண குணங்கள உணடாகின் றன. இங்கு எம்பெருமாள் தனது திருமேனி திவ்யாபரணங்களாலும், திவ்யாயுத ஙகளாலும் அலஙகரிக்கப் பெற்றவனுய், ஸ்ரீ, பூ, நீளாதேவி ஸஹிதனுய, நித்ய ஸூரிகளாலும முக்தர்களாலும் ஸதா இமை கொட் டாது அநுபவிக்கப்படுபவனுகவும் திகழ்கிருன். இந்த திவ்ய மங்கள ரூபம் எம்பெருமான தனக்கும தனது திவ்யாத்ம ஸ்வரூபத்தைக் காட்டி லும் மிக்க விருப்பமானது என்று ஆளவந்தார சதுச்லோகியில் அருளி யுள்ளார்.

வ்யூஹம் :

வ்யூஹங்கள் பரவாஸுதேவனிட மிருந்து உண்டாகும் ரூபங்களாகும். இவை வாஸுதேவன், ஸங்கர்ஷணன, ப்ரதியும்னன், அநிருதிதன் என நான் காகும். இவற்றில் முதல் ரூபமாகிய வ்யூஹ வாஸுதேவன் பரவாஸுதேவ னிடமிருந்து நேராக உணடாகிறது. வ்யூஹ வாஸுதேவனிடமிருந்து ஸங கர்ஷணனும், அவனிடமிருநது ப்ரத் யும்னனும், அவனிடமிருநது அநிருத் தனும் முறையே உற்பத்தியாகின் றனர். சில சமயஙகளில் வ்யூஹங்கள் மூனறு எனறும் கூறுவதுண்டு (வரத ராஜஸ்தவம் 16). இதற்குக் காரணம் பரவாஸுதேவனுக்கும் வ்யூஹ வாஸு தேவனுக்கும் வித்யாஸம் இல்லாததே. இந்த வ்யூஹங்களின் குணங்களையும் காரயங்களையும் ஸ்ரீபராசர பட்டர் ஸ்ரீரங்க ராஜ ஸ்தவத்தில் (2-39) அழகாக அருளியுள்ளார்!

"பகவானுகிய ரங்கராஜனே! ஆறு குணங்களையுடைய பரவாஸுதேவன் எனறு சொல்லப்படுகிற தேவரீர முக்தர்களால அநுபவிக்கப்படுகிறீர். அப்படியே ஞானமுகப் பிரிந்து பலம், ஜ்ஞானம் இவறறையுடைய ஸங கர்ஷணனுயிருந்து உலகை ஸமஹரிக் கிறீர், சாஸ்திரத்தை ப்ரவசனம் செய்கிறீர்; ஐச்வர்யம், வீர்யம் எனற குணங்களையுடைய ப்ரத்யும்னரா யிருநது உலகைப் படைத்து, தர் மத்தை நடத்துகிறீர்; சக்தி, தேஜஸ் என்ற குணஙகளையுடைய அநிருத்தனு யிருநது ரக்ஷிக்கிறீர், தத்வத்தை உப தேசிககிறீர்."

விஷ்வக்ஸேன ஸம்ஹிதை அநிருத் தனிடமிருநதே விபவஙகள உண்டா கினறன என்று தெரிவிக்கிறது. வாஸுதேவனிடமிருந்து கேசவன், விஷ்ணு, மதுஸூதனன; ப்ரத்யும்ன னிடமிருந்து த்ரிவிக்ரமன், வாமனன், ஸ்ரீதரன்; அநிருத்தனிடமிருந்து ஹ்ருஷீகேசன், பத்மநாபன், தாமோ தரன் என்ற வ்யூஹாந்தரங்கள் உண டாகின்றன. இவை வருஷத்தின் 12 மாதங்களின் அதிஷ்டான தேவதை கள்.

விபவம :

பகவான தனனுடைய அபார கருணையால் மனுஷ்ய, ம்ருகாதி களுக்கு ஸஜாதீயனுய்ச் செய்யும் அவ தாரங்கள் விபவஙகளாகும். க்ருஷ்ண னின் ரூபங்கள் எணணிலடங்கா என்று பாஞ்சராத்ரம் உதகோஷிக் கிறது நம்மாழ்வாரும் 'என்றென்று யோனியுமாய்ப் பிறந்தாய்' என்றே திருவிருத்தத்தில் அருளினுர். தண்ட காரண்யத்தில் மாமரமாகக்கூட ஓர் அவதாரம் உணடாம்! ஸ்ரீமத் பாக வதம் மூன்று அத்யாயங்களில் அவ தாரங்களின் பட்டியல்களைக் கொடுத் துள்ளது.ஆயினும் அஹிர்புத்ந்ய ஸம் ஹிதை ஐந்தாம அத்யாயம் 39 முக்ய அவதாரங்களைக் கூறி, ஸாத்வத ஸம் ஹிதையில அவற்றைப் பற்றிய முழு விவரங்கள் உளளன என்று தெரிவிக் கிறது. இவற்றுள் ஸம்ப்ரதாயத்தில் முக்யமான தசாவதாரங்கள் சிற் சமயம் சிறிது வேறுபட்ட பெயர் களுடன் அடங்கியுளளன. ஹம்ஸ, ஹயக்ரீவாவதாரங்களும் இவற்றுள் கணககிடப்பட்டவையே. இந்தப் பட்டியலை டாக்டர் ஷரேடர் என் னும் பாச்சாத்திய மேதை தமது புத் தகத்தில் விரிவாக அலசியுள்ளார.

விபவததின் உட்பிரிவுகள :

முகயம்,கௌணம என்ற இரணடும் விபவத்தின் முகய பிரிவுகள். கௌணம் என்பதை ஆவேசமென் றும் கூறுவர். இவ்விரணடுககுமுளள வித்யாஸம் விஷ்வக்ஸேன ஸம்ஹிதை யில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது. முக்யாவதாரத்தில் எமபெருமான் தானே ஓர் அப்ராக்ருதமான திரு மேனியை பரிக்ரஹிக்கிருன். கௌணு வதாரத்தில் ஓர் பக்த ஜீவனை ஓர் குறிப்பிட்ட காலத்தில் தன் சக்தி யினுல் ஆவேசிக்கிருன். முக்ய, கௌணுவதாரங்கள் ப்ராதுர் பாவங் கள், ப்ராதுர் பாவாநதரங்கள் என் றும் வழங்கப்படும். முமுக்ஷு முக்யா வதாரங்களையே வழிபடக்கடவன். இவ்விஷயத்தை ஸ்ரீ பராசர பட்டர் பகவத் குண தர்பணத்தில் "வரா ரோஹ:" (122-ம் நாமம்) என்ற நாமத்தின் கீழ் பாஷ்யத்தில், பாஞ்ச ராத்ர ஆதாரத்துடன், விரிவாக விளக்கியுள்ளார். ஆயினும் கௌணு வதாரங்களைத் துதிப்பதில் யாதொரு தடையுமில்லை. திவ்ய ப்ரபந்தங் களில் இதைப் பல விடங்களில் காண லாம் (உதாஹரணம்: "வென்றிமா மழுவேந்தி","கோக்குலமன்னரை").

ஆவேசாவதாரமும் இரு பிரிவுடை யது. ஸ்வரூபாவேசம், சக்த்யா வேசம என்று. இவற்றில் முறையே பகவானின் ஸ்வரூபத்தினுடையவும், சக்தியினுடையவும் ஆவேசங்கள் உள்ளன. பரசுராமனும் பலராம னும் ஸ்வரூபா வேசததிறகு உதா ஹரணங்கள் அர்ஜுனன், கார்த்த வீர்யன், வ்யாஸர் ஆகியோர் சக்த்யா வேசங்கள். ப்ராஹ்மணர்களுக்குத் துன்பம் விளைக்கும் க்ஷத்ரியப் பூண்டு களை ஒழிக்கும் வரை பரசுராமனிடம்

எம்பெருமானின் ஆவேசமிருந்தது. இராமனால் அவர் தோல்வியடைந்ததும் அது மறைந்தது. இதை பகவானான பரசுராமன் வெறும் முனியானான் என்று ஸ்வாமி தேசிகன் தசாவதார ஸ்தோத்ரத்தில்(சலோ 7) அழகாகக் காட்டுகிறார்.

சக்தி ஆவேசமான கார்த்த வீர்யனை பரசுராமன் கொன்றார். ஸ்வரூபாவேசமான பரசுராமனை இராமன் வென்றார். இதிலிருந்தே சக்தி ஆவேசத்தை விட ஸ்வரூபாவேசம் மேம்பட்டது, அதைவிட முக்யாவதாரம் சிறந்தது என்பது தெளிவாம்.

**அந்தர்யாமி.**

ஒவ்வொரு ஜீவனின் இதயத்திலும் பகவான் ஸூக்ஷ்ம ரூபத்தில் எழுந்தருளியுள்ளான் (கீதை 18-61). அவனை अङ्गुष्ठमात्रः पुरुषः என்று உபநிஷத்துக்கள் குறிக்கின்றன (கடோபநிஷத் 4-12, 6-17). யோகாப்யாஸத்தில் வெற்றி பெற்றவர்களே இப் புருஷனைக் காண முடியுமென்று ஸாத்வத ஸம்ஹிதை (2-7-8) கூறுகிறது.

அந்தர்யாமி அவதாரம் பகவானின் எல்லை கடந்த கருணையால் ஏற்பட்ட செயலாகும். ரக்ஷகனைத் தேடி நாம் எங்கும் அலைய வேண்டாதபடி அவன் நமக்கு மிகவும் அருகிலேயே உள்ளான். நம்மையேவிட நமக்கு அருகிலுள்ளான். எவரும் த்யானம் செய்ய சௌகர்யமாக அவரவர் உள்ளத்துள் உறைந்துள்ளான்.

**அர்ச்சை :**

க்ருஹங்களில் ஸாளக்ராம ரூபமாகவும், கோயில்களில் விக்ரஹ ரூபமாகவும் பூஜிக்கப்படுவது அர்ச்சை. விஷ்ணு தர்மம் (103-16) கூறுவதாவது.

सुरूपां प्रतिमां विष्णोः प्रसन्नवदनेक्षणाम् ।
कृत्वाऽऽत्मनः प्रीतिकरीं सुवर्णरजतादिभिः ॥
तामर्चयेत्तां प्रणमेत् तां यजेत्तां विचिन्तयेत् ।
विशत्यपास्तदोषस्तु तामेव ब्रह्मरूपिणीम् ॥

"தங்கம், வெள்ளி முதலியவைகளாலே அழகிய ரூபத்தையுடைய தாயும், தெளிந்த திருமுகம், திருக்கண்கள் இவைகளையுடையதாயும் உள்ள எம்பெருமானுடைய ஒரு பிம்பத்தைச் செய்து அதை ஆராதிக்க வேண்டும். அதை நமஸ்கரிக்க வேண்டும், அதற்கு ஆராதனம் செய்ய வேண்டும். இதனால் தோஷங்கள் நீங்கி பரவாஸுதேவரூபமான அந்த பிம்பத்தையே சேருகிறான்." (பிம்பத்தில் எழுந்தருளியிருக்கிற ரூபமும் பரரூபமும் ஒன்று என்று கருத்து.)

தொழுபவனின் இச்சைக்கும் ருசிக்கும் ஏற்ப ஆர்ச்சையானது பர, வ்யூஹ விபவங்களில் ஏதாவது ஒன்றைத் தழுவி இருக்கலாம். ஆகமங்களில் விதித்தபடி விக்ரஹம் மந்த்ரங்களால் ப்ரதிஷ்டை செய்யப்பட்டால, பக்தனின் கோரிக்கைக்கு இணங்கி அளவிட முடியாத அனந்தன் தன்னை அந்த பிம்பத்தின் அளவுக்குச் சரியாக அமைத்துக் கொண்டு, நீரும் பாலும் கலப்பது போல் அதில் தனது திவ்ய மங்கள விக்ரஹத்துடன் கலந்து அதனுடன் ஒன்றாகிவிடுகிறான் என்று ஸாத்வத ஸம்ஹிதை (6-22) அறுதியிடுகிறது. தன்னுடைய விருப்பப்படி பக்தன் வழங்கும் பெயரையும் உருவத்தையும் ஏற்கிறான் எம்பெருமான். தன்னைத் தானே இவ்விதம் அளவுபடுத்திக் கொள்வது எம்பெருமானின் மேன்மையை எவ்விதத்திலும் குறைவுபடுத்தாது, அதிகரிக்கவே செய்யும். ஆகவே அர்ச்சையை மற்ற ரூபங்களைவிட உயர்ந்ததாகப் போற்றுகின்றனர்.

தன்னுடைய முந்திய ரூபங்களை பக்தனின் இச்சைக் கிணங்கி ஆர்ச்சையில் பின்புளளோரும வணங்கும் படி தன்னைச் சமைத்துக் கொள்வது எம்பெருமானின தயாகார்யங்களின் சிகரமாக விளங்குகிறது. தன்னை அநாதரிப்பவர்களையும் ஆதரிக்கக் காத்திருக்கும் ரூபம் அர்ச்சை. நமக்கு நம்பிக்கை யூட்டி, தைர்யமளித்து, துயரத்தைத் துடைப்பது அர்ச்சை. ஜீவர்களை மீட்பதற்காக நிரந்தரமாக எடுக்கப்பட்ட அவதாரம் அர்ச்சை. அவர்களைக் காப்பாற்றும் பகவத் ஸங்கல்பத்தின் வ்யக்தமான ரூபம் அர்ச்சை. காப்பாற்றுவதற்கு ஜீவர்கள் உள்ளவரை நிலை பெயராமல் இருக்கும் தயாமூர்த்தி அர்ச்சை.

அர்ச்சை ஐந்து விதமெனப்படும். அவையாவன: ஸ்வயம் வ்யக்தம், திவ்யம், ஸைத்தம், ஆர்ஷம், மானுஷம என்பன. அதாவது தாமாகவே உண்டானவை, தேவர்கள், ஸித்தர்கள், ரிஷிகள், மனுஷ்யர்கள் ஆகியோரால் ப்ரதிஷ்டை செய்யப்பட்டவை என்றபடி. ஸ்வயம் வ்யக்த க்ஷேத்ரங்கள் எட்டு என்பர். அவையாவன: ஸ்ரீரங்கம், ஸ்ரீமுஷ்ணம், வேங்கடாசலம, ஸாளக்ராமம, நைமிசாரண்யம், தோதாத்ரி (வானமாமலை) புஷ்கரம், வதரி.

(இன்னும் வரும்)



# கீதை காட்டும் நல்வழி

மோக்ஷ ஸன்யாஸ யோகம்

அத்தியாயம் —18

பகுதி — 2

த்யாஜ்யம் தோஷவதித்யேகே
காம ப்ராஹுர்மனீஷிண :
ய்க்ஞதானதப: காம
ந த்யாஜ்யமிதி சாபரே ॥ (18—3)

'கருமங்களெல்லாம் குற்றமுடைய வைகளாதலால் துறக்கப்பட வேண் டியவையே என்று சில அறிஞர்கள் கூறுகின்றனர். மற்றும சிலர் வேள்வி, தானம், தபம் ஆகிய கருமங்கள் துறக் கப்படலாகாது எனகின்றனர்'

மழை பெய்கிறது. இது காரணம். வெள்ளம பெருக்கெடுத்தோடுகிறது. இது காரியம். மழையால் வயலில் உள்ள பயிர்கள வளருகின்றன. வள ரும் பயிருக்கு மழை நீர் தேவை. ஆனல் புதிதாக வீடு கட்டும் ஒருவ னுக்கு மழை இன்னலைத் தருகிறது. விவசாயி, 'மழை வேண்டுமே' என்று பிரார்த்தனை செய்யும் அதே வேளை யில், புதிதாக வீடு கட்டுபவன 'மழை வேணடாமே' என்று பிரார்த்தனை செய்கிறுன. மழை பெய்தல் ஆகிய கருமத்தில் நன்மை, தீமை இரணடும் சேர்ந்தே காணப்படுகின்றன.

உயிர் வாழ நாம சுவாசிக்கிறோம. அதே வேளையில் நாம சுவாசிக்கும் காற்றில் உள்ள எணணற்ற சிற்றுயிர் களை நாம் காறறுடன் உறிஞ்சி மாய்க கிறோம். விளக்கு எரிவதால் நமக்கு வெளிச்சம் கிடைக்கிறது. அது நமக்கு நலம் பயக்கிறது. ஆனல் எரி யும் விளக்கில் எத்தனையோ பூச்சிகள் பறந்து வீழ்ந்து மடிகின்றன. அது கொடிய செயல். இவ்விதம் எநதக் கருமத்தைக கணக்கிலெடுத்தாலும் அதில் நல்லதும் கெடுதலும் கலந்தே காணப்படுகின்றன. முழுக்க முழுக்க நல்லதாகவோ அல்லது கெடுதலா கவோ உளள கருமத்தைக் கணக்கி லெடுத்தாலும் அதில நல்லதும் கெடு தலும் கலந்தே காணப்படுகின்றன. முழுக்க முழுக்க நல்லதாகவோ அல் லது கெடுதலாகவோ உள்ள கருமத் தைக் காணல் அரிது. எவவளவு தான நல்லது என்று கருதபபடும் கருமத்திலும சிறிதளவாவது கெடுத லும் கலந்திருக்கும்.

இந்த சுலோகத்தில் பகவான்கூறும் கருத்தும் கர்ம யோகத்தில் ஈடுபடு பவர்களைப் பற்றியே தவிர, கர்மம கடந்த பெருநிலைக்குப் போன ஞான வான்களைப் பற்றி அல்ல. ஸாங்க்ய யோகிகள கருத்து என்னவெனில கர்மம் எதுவானலும் குற்றத்துடன் கூடியது, தவிர்க்கப்பட வேணடியது என்பதாகும்.

'தோஷவத்' — தோஷம் அல்லது தியதைப் போல, காமம், குரோதம், லோபம போன்றகுணங்கள் எவ்விதம் தோஷமாகுமோ, தவிர்க்கப்படவேண் டியவையோ அதுபோல கர்மமும தோஷம் என்பது அவர்களது கருத்து.

ஆனல் வேறு சிலர் எல்லாக் கர்மங் களும் தோஷமுடையவை அல்ல, யக் ஞம், தானம், தவம போன்றவை கருமங்களையானலும் அவை தவிர்க் கப்பட வேணடியவை அல்ல என்று கருதுகின்றனர்.

ரோஜாச் செடியில் முள் இருக் கிறது என்பதற்காக ரோஜாப் பூவை விரும்பாதவர் உணடோ? சேற்றில் தாமரை மலர்கிறது என்பதற்காக தாமரையை விரும்பாதவர் உண்டோ? பிறவியே பெரும்பிணி என்ருலும், வாழ்வு இன்னல்கள் பல நிறைந்தது என்ருலும் வாழ விரும் பாதார் எவரும உண்டோ? அது போல கர்மங்கள வினைவை உண்டாக் கும் என்பதால் கர்மம் முழுவதை யுமே புறக்கணிப்பது தகாது எனபது ஒரு சிலரது கருத்து. இந்தச் சிக்க லைத் தீர்க்கும் விதத்தில் பகவான் தியாகத்தைப் பற்றிய விளக்கத்தைக் கீழ்க்காணும் சுலோகஙகளில் தரு கிருர்.

நிஸ்சயம் ச்ருணு மே ததர
த்யாகே பரதஸத்தம |
தயாகோ ஹி புருஷவ்யாக்ர
தரிவித : ஸம்ப்ரகீர்த்தித.॥ (18-4)

"பரதகுலத்தில சிறந்தவனே! மனி தருள் வேங்கையே! தியாகத்தைப் பற்றி எனது கருத்தைக்கேட்பாயாக. தியாகமானது மூவகையாகப் பகரப் பட்டுள்ளது"

திரு. டி. கே. நாராயணன்,
M.Sc., M.Phil.
ஆசிரியர் "சமயஜோதி" மதுரை.

தியாகம்தான் வாழ்க்கையில் வெற் றிக்கான சீரிய வழி என்பது பகவா னது கொள்கை. அருள் மார்க்கம் பொருள் மார்ககம் இரணடிலுமே தியாகம் இன்றியமையாததாக விளங் குகிறது. 'ந கர்மணு, ந ப்ரஜயா, ந தனேன த்யாகேனைகே அம்ருதத்வ மானசு:- 'கருமங்களால், புத்திரர் களால், செல்வத்தால் அல்லாமல் தியாகத்தினுல் மட்டுமே அழி யாப் பெருநிலை அடையப்படு கிறது' என்பது உபநிடத வாக்கிய மாகும். பறவையினம், விலங்கினம், மனித இனத்தில் மட்டுமல்லாது இயற்கை முழுவதுமே ஏதாவது ஒரு விதத்தில் இப்பேருண்மை யாண்டும்

# ஸ்ரீவேங்கடேச நித்யசேவை பாமாலை

பொழுதே புலராத முன்னிருள் நேரத்தில்
தொழுதே நிற்பாரின் இன்னிசை நாதத்தால்
உறக்கமே இல்லாத திருமாலின் திருவிழிகள்
திறக்கவே ஒலிக்கும் சுப்ரபாதம் கேள்மினே

*(கௌசல்யா சுப்ரஜாராமா ..மங்களம்வரும்)*

பாமாலை புனைந்தே பாவலா சூழநின்று
பூமாலை நிறைவாலே பூமகள் தாங்கிட
சீர்மாலை சிரத்திலே செம்மல் தாங்கிட
தோமாலை சேவையில் அண்ணலை காண்மினே

*(ஸ்ரீமான்.நாராயண [அன்னமாசார்யா])*

ஆயிரம் கலசங்கள் அபிஷேக நீராலே
பாயிரம் பலபாடி பக்தர்கள் நீராட்ட
ஸஹஸ்ராம நாயகன் சீனிவாஸ நாரணன்
ஸஹஸ்ரகலசாபிஷேக வைபவம் காண்மினே

*(ஸ்ரீராம ராம ராமேதி..... வரானனம்)*

நீராடி அலங்காரம் எழிலாக அணிபூண்டு
சீரார் திருமலையான் கொலுவில் வீற்றிட
பாரார் பக்தருடன் வேதியர் ஊழியருடன்
பஞ்சாங்க ச்ரவண திருக்கோலம் காண்மினே

*(டோலாயாம. ....அன்னமாசார்யா)*

ஆயிரம் நாகொண்ட ஆதிசேஷன் மேல்துயிலும்
திருமறை போற்றிடும் திருப்பதி நாதனுக்கு
ஒருமறை கூவிடினும் ஓடிவந்து அருள்பவனை
ஆயிரமாய் அழைத்திடும் ஸஹஸ்ரநாமம் கேள்மினே

*(சாந்தாகாரம் புஜகசயனம். சர்வலோகைகநாதம்)*

சூழும் வினைஎரிக்கும் வேங்கடநாயகன்
ஏழுலகுங்காக்கும் ஏழுமலை வேந்தன்
குறையாவும் தீர்க்கும் திருமகள் நாதனும்
வரையின்றித் தரும் சர்வதரிசனம் காண்மினே

*(திருக்கண்டேன்.. பாசுரம்)*

ஆர்ஜிதம் ப்ரம்மம் எனஉத்சவம் பலவுண்டு
கர்மவினை அழிவுற நானிலம் செழிப்புற
ஆனந்தம் பொங்கிட மங்கலம் பாண்புற
அனுதினம் நித்யகல்யாண வைபவம் காண்மினே

*(கல்யாணவைபோஹமே ... .. )*

முடிவின்றி உனைநாடும் அன்பரே ஓய்ந்திட
அடிவருட அலைமகள் அன்புடன் கார்த்திட
ஸ்ரீகாந்தன் தனிமையாய் இருள்சூழ் இரவினில்
ஏகாந்த சேவை தரும் இன்பமே காண்மினே

*(மங்களம் [கோசலேந்தராய]......)*

—"விசாகன்"—மதுரை.

செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. சூரியன் ஓயாது ஒளியையும், உஷ்ணத்தையும் தியாகம் செய்து கொண்டேயிருக்கிறது. அதனால் உயிர்களை வாழ வைக்கிறது. மரக்கிளையில் காயாயிருந்து கனியானதும் தானுக்கு கிளையைத் தியாகம் செய்து விடுகிறது. பத்து மாதம் காப்பத்தில் குழந்தையைப் பாதுகாத்த தாய் பிரசவகாலத்தில் அதை உடலிலிருந்து தியாகம் செய்து விடுகிறாள். கர்ம வினையால் பழுதுபட்ட சரீரத்தை அதில் உறையும் ஜீவன் தியாகம் செய்து விடுகிறது. இன்னும் இத்தகைய உதாரணங்களை இயற்கையில் நாம் ஏராளமாகக் காணலாம். மேற்சொன்ன உதாரணங்களில் உள்ள மரம், தாய், ஜீவன் அனைத்தும் தியாகத்தின் காரணமாக ஏற்றத்தையே அடைகின்றன. அதுமட்டுமல்ல, அப்படித் தியாகம பண்ணுவிட்டால் அவை கேட்டை யடையும்.பள்ளியில் கல்வி பயிலும் மாணவன் என்றுவது ஒரு நாள் பள்ளியைத் தியாகம் செய்தே வாக வேண்டும். என்றென்றும் பள்ளியில் இருப்பது மாணவனின் நோக்கமல்ல. அதுபோல கர்மத்தை விடாது பற்றிக்கொணடிருக்கும் ஒருவன் ஒரு நாள் அதைத் தியாகம் பண்ணியே யாக வேண்டும். கர்மத்தை விடுவதற்கு முன் தியாகத்தின்உட்பொருளை நாம் நன்கு அறிந்து கொள்ள வேண்டும்.

யக்ஞதானதப : கர்ம
ந த்யாஜ்யம் கார்யமேவ தத் |
யக்ஞோ தானம் தபஸ்சைவ
பாவனானி மனீஷிணாம் || (18—5)

'யக்ஞம், தானம், தபம ஆகிய கர்மம் விடவேண்டியவை அல்ல. அவை செய்யப்படவேண்டியவையே. யக்ஞமும், தானமும், தவமும் அறிஞர்களுக்குத் தூய்மையை அளிப்பவைகளாம்!'

கீதையில் பொதுவாகப் பல்வேறு யோகங்கள் பற்றி விரிவாக விளக்கப் பட்டாலும், அதில் பரவலாக வலி

யுறுத்திப் பேசப்படுவது கர்மயோக மேயாகும். கர்மத்தை எவராலும் தவிர்க்க இயலாது. எனவே கர்மங்களைச் செவவனே செயதல் மூலம், வெறும் கருமங்களை கர்மயோகமாக மாற்றுவதன்மூலம் ஒருவன் கர்மாதித அதாவது செயல் கடந்த பெருநிலைக்குப் போக முடியும் என்பதை சாதாரண உலகியல் மனிதனுக்கு வலியுறுத்துவதே கீதையின் அடிப்படை நோக்கமாகும்.

கர்மங்களை ஒட்டு மொத்தமாக எவராலும் விட முடியாது, விடவும் கூடாது. கர்மங்களால் தன்னை ஒருவன் பக்குவப்படுத்திக் கொண்ட பின்னர் இயற்கையாகவே கர்மம் கடந்த பெருநிலைக்குச் சென்றுவிட முடியும். இதை ஒரு அரிய உதாரணத்தால் விளக்கலாம் பட்டுப் புழு தான் வாழ ஒரு கூடு கட்டுகிறது. தான் கட்டிய கூட்டினுள்ளேயே அது சிறை பட்டுக்கிடககிறது. அப்படிச் சிறை படடுக் கிடப்பதும் அதனுடைய நன்மைக்காகவே முடிகிறது. புழுவாக இருந்தது நாளடைவில் அழகிய பட்டுப் பூச்சியாக வெளிவருகிறது. அநாவது தான் கட்டிய கூட்டைத் தானே உடைத்துக் கொண்டு, பரந்து விரிந்த உலகைக் கண்டு ரசிக்க அது கூடு என்னும் தளையை நீக்கி வெளிவருகிறது. அந்தப் புழுவின வாழ்வில் முதலில் கூடுகட்டுவது எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவசியம் கூட்டை உடைப்பதும் ஆகிறது. இதைப் போலவே மனிதன் செய்யும் ஆசைக்குட்பட்ட கர்மங்கள் யாவும் அவனை முதலல் பந்தப்படுத்துகின்றன. தான்செய்த காமங்களால் உண்டான பந்தததிற்கு அவனே கட்டுப்பட்டு விடுகிருன். ஆனல் காலக்கிரமத்தில் காம்ய கர்மங்கள் நிஷ்காமய கர்மங்களாக ஆகி அவனைப் பநதத்திலிருந்து விடுவிக்கவும் செய்கின்றன.

யக்ஞம், தானம், தவம் முதலான கர்மங்கள் முறையாகச் செய்யப்பட்டால், சுயநலம் இன்றி பொது நன்மைக்காகச் செய்யப்பட்டால அவை இகவுலகில் நலம் பயப்பதோடு மட்டுமல்லாது, முறையோடு செய்யும் அறிஞர்களை அவை தூய்மைப்படுத்துகின்றன. மூவகை யக்ஞம், தானம் மற்றும் தவம் பற்றி ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளன. அவற்றுள் சாத்விக வகை யகஞம, தானம், தபம் ஆகியவை இங்கே குறிப்பிடபபடுகின்றன.

இககருமங்கள் எப்படி ஒருவன் செய்ய வேண்டும் என்ற கேள்விக்கு அடுத்த சுலோகத்தில் பகவான் விடை தருகிறுர்.

(தொடரும்)

# குறுக்கெழுத்துப் புதிர்



எஸ். லோகநாயகி
கோயமபுத்தூர்.



| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | | 6 | | | | |
| | 7 | | | | 8 | | 9 | | | 10 |
| | | | 11 | | | 12 | | | | |
| | | | | | | 13 | | | | |
| | | | | | | | | 14 | | |
| | 15 | | | 16 | | | | 17 | | |
| | | 18 | | 19 | | | | | | 20 |
| 21 | | | | | 22 | 23 | | | 24 | |
| | 25 | | 26 | | | 27 | | | | |
| 28 | | | | | 29 | | | | | |
| 30 | | | | | | | | | | |

## குறிப்புகள்

### இடமிருந்து வலம்

1. இவர் நான்கு முகம் இல்லாத பிரம்மா; இரண்டு கை யுள்ள ஹரி; நெற்றிக் கண் இல்லாத சிவன்; சிறந்த குரு —— என்று வர்ணிக்கப்படுகிறார்.
6. குரு பக்தி —— ஆனது.
7. கவி காளிதாசனை ஆதரித்த அரசன்.
8. இறைவன் பொருள்சேர் புகழுரை.
12. எல்லாம் மண்ணாகி விடுகிறது என்ற உண்மையை விளக்க ——, திருநீறு தரிப்பதாகும்.
13. சிவனைக் குறிக்கும்.
14. —— அடைவதே ——வை போக்கிக் கொள்ளத் தான்.
15. "வேதம் —— செய்த மாறன் சடகோபன்" என்கிறார்கள்.
16. பாவை நோன்பு மார்கழி இதில் ஆகும்.
17. சிவன் —— என்றழைக்கப்படுகிறான்.
19. "சிவ ——" என்பர் சிவநேசர்.
21. நவராத்திரி முதல் மூன்று நாட்களில் —— வழிபாடு.
22. —— மருகன் முருகன்.
26. சாதனையில் வெற்றி.
27. தெய்வம் நமக்கு நல்லது தருவது அதன் சுபாவமான ——யால் ஆகும்; துன்பத்தைக் கொடுப்பது அதை விட ——.
28. யாரோ —— செய்கிறார், என்று சொல்லி ஊனை வாங்கிச் சாப்பிட்டாலும் பாவம்தான்.
29. "—— அடியேனையும் தாங்குதல்"
30. பெரியாழ்வார் மங்களா ஸாசனம் செய்த மணி வண்ணன்.

### மேலிருந்து கீழ்

1. முருகனடியார் எண்ணுவது.
2. திருக்கோயிலூரில் —— உள்ளது.
3. நவராத்திரி விழா நிறைவு நாள்.
4. —— செத்தால் நலம் பெறலாம்.
5. நவராத்திரி பின் மூன்று நாட்களில் —— வழிபாடு.
6. சிவநேசர் சிறப்புற அணிவது.
8. புகழோடு —— விரும்பு.
9. நவராத்திரி இடை மூன்று நாட்களில் —— வழிபாடு.
10. லோக அன்னை.
11. அறன் எனப்பட்டது.
15. —— வேதம் ஓர் உபவேதம்.
17. திருமால் படுக்கை.
18. தெய்வ காரியங்களுக்கு —— வேண்டும்.
19. பித்ரு காரியங்களுக்கு —— வேண்டும்.
20. சிவமந்திரம்.
23. மனதை அடக்குவதே ——.
24. —— மருவள்ளி.
25. இதன் தோகை ஓங்கார வட்டத்தை காட்டுகிறது.
26. சிவ —— என தீவினை மாயும்.

(விடைகளுக்கு 30-ம் பார்க்க

# தீபாவளியும் தீப வழிபாடும்

தீபாவளியைத் தீப ஆவளி என்று பகுத்தால் 'தீபங்கள் வரிசை' என்று பொருள்படும். தீப வழிபாடு நம் இந்து மதத்தின் உயிர்நாடி. இறைவனை ஒளி வடிவமாக வழிபடுவது நம் பண்டைய மரபு. ஒளியே சிவம் என்பது இராமலிங்க சுவாமிகள் கருத்து.

"அருள் விளக்கே அருட்சுடரே அருட்
சோதிச் சிவமே"

என்று ஈசனை அவர் பரவிப் பாடுவார். சம்பந்தர் சோதியுள் ஒரு சோதியான் என்பார். சுந்தரமூர்த்திகளோ, தூண்டா விளக்கின் சுடரனையான் என்பார். அப்பரடிகள்,

" விறகிற் தீயினன் பாலில படு நெய்
போல்
மறைய நின்றுளான் மாமணிச
சோதியான் "

என்பார். தாயுமானவர்,

' சுத்த நிர்க்குணமான பர தெய்வமே
பரஞ்சோதியே சுகவாரியே '

என்று பாடுவார். ஒளியாகிய தீ தன்னை வந்தடைந்ததன் அழுக்கைப் போக்கித் தன்மயமாக்கிக் கொள்ளும். அதேபோல் ஈசன் ஆன்மாக்களின் ஆணவ அழுக்கைப் போக்கித் தன்னுடன் சேர்த்துக் கொள்வார்.

நமி நந்தி அடிகள், கலிய நாயனர், கணம் புல்ல நாயனர் ஆகிய நாயன்மார்கள் திருவிளக்குத் தொண்டாலேயே இறைவன் அருளைப் பெற்றவர்கள். திருமூலர் இறைவனைப் பரவி,

"விளக் கொளியாக விளங்கிடு நீயே"

என்று பாடுவார். வைணவக் கோயில்களில் விளக்கொளிப் பெருமாள் என்று ஒரு சன்னிதியே இருக்கக் காணலாம். காஞ்சியில் உள்ள தீபப் பிரகாசா திருக்கோயிலில் உள்ள திருமாலின் பெயரே விளக்கு ஒளிப் பெருமாள் என்பது ஈண்டு குறிப்பிடத்தக்கது.

தீப வழிபாடு சைவ வைணவ புத்த ஜைன மதத்தினர் எல்லோருக்குமே பொதுவானது. ரிக் வேதத்தில் இந்திரனுக்கு அடுத்த இடம் அக்னிக்குக் கொடுக்கப்பட்டுள்ளது. ராமாயணம் மகாபாரதம் தங்கத்திலான விளக்குகளை வருணிக்கின்றன. இலங்கையை ரத்ன விளக்கு எனறு வான்மீகி கூறுவார். பகவத் கீதையில் கண்ணபிரான் விளக்கின் ஜோதி போல மனசை ஒருமுகப்படுத்த வேண்டும் என் கூறுவார். ரகு வம்சத்தில் இந்துமதியின் முகத்தை விளக்கின ஜ்வாலைக்கு ஈடாக காளிதாஸர் உருவகப்படுத்துவார். மொகஞ்சதாரோநாகரீகத்தின் இடிபாட்டுச் சின்னங்கள், ஐயாயிரம் ஆண்டுகட்கு முன்பும் அம்மக்கள் அழகிய விளக்குகளை உபயோகப் படுத்தியதை நமக்குப் புலப்படுத்துகின்றன.

தீப தானம் மற்ற எல்லாவகை தானங்களிலும் சிறந்தது. கோயில்களில் விளக்கு நாச்சியார் திருவுருவம் பண்டைககாலம்தொட்டு இருந்திருக்கிறது. இப்பாவை விளக்குகள் பற்றி சங்க நூல்களிலேயே குறிப்புக்கள் உள்ளன. கிரேகக நாட்டிலிருந்து இப்பாவை விளக்குகள் அமைக்கும பழககம் தமிழ்நாட்டிற்கு வந்ததாகச் சிலரும், தமிழ் நாட்டிலிருந்து கிரேக்கத்திற்குப் போனதாக மற்ெருரு சாராரும் கூறுவர். படையெடுப்பிற்கு முன்பு போருக்குப் போகும் வீரர்களை விளக்குடன் சிறிது தூரம் கொண்டு விட்டு மறுபடியும் அவர்கள் சுற்றத்தார்கள் கோட்டைக்குத் திரும்புவார்களாம்

கோயில்களில் என்றென்றும் தீபம் எரிந்து கொண்டிருக்கும் பொருட்டு, நெய்யைத் தரவல்ல கால்நடைகளைக் கோயில்கட்குத் தானமாகப் பலர் அந்நாளில் கொடுத்திருக்கிறார்கள். பஞ்சாபிலும், குஜராத்திலும் விளக்குகளை ஏந்தி நடனமாடுவது உண்டு. கேரளத்திலும் ஓணத்தின் போது கேரள மங்கையர் விளக்குகளுடன் நடனமாடுவது தொன்று தொட்டு வரும் வழக்கம். கேரளக கோயில்களில் சீவேலி என்று கூறப்படும் இறைவன் திருமேனித் திருச்சுற்று திருவுலாவின் போது, விளக்குகளை ஏந்திக் கோயில் பூசாரிகள் முன்செல்வது வழக்கம். இங்கு விளக்கு பிரதான இடம் வகிக்கிறது. நாக வடிவத்தில் அமைந்த தீபங்கள் தீப லக்ஷ்மி என்று பூஜிக்கப்பட்டுப் பலருக்குக் குலதெய்வம் போல விளங்கி வருகின்றன என்றால் மிகையாகாது. தீபத்தைப் பார்த்து ஆருடம் கூறும் தீபப்ரச்னம் கேரளத்தில் பிரசித்தம்.

மொகலாய சக்ரவர்த்தி அக்பர்

திரு. B. சுந்தரராமன், M.A., B.Ed.
பழமார்னேரி.



# பேரூர்

கோயம்புத்தூரிலிருந்து 4 மைல் தூரத்தில் நொய்யலாற்றின் கரையிலுள்ள பெரிய சிவஸ்தலம் இது. கொங்கு நாட்டில் பாடல் பெற்ற ஏழு சிவஸ்தலங்களில் ஒன்று. இதற்கு மேலைச் சிதம்பரம் என்று பெயர். இந்தக் கோவிலில் சிற்ப வேலையமைந்த ஒரு மண்டபம் உண்டு. அதற்கு கனகசபை என்று பெயர். பங்குனி மாதம் ரத உற்ச வமும் மார்கழி மாதம் ஆருத்ராதரிசனமும் இங்கு முக்கியமான திரு விழாக்கள். நொய்யல் நதி இங்கு புண்ணிய நதியாக (காஞ்சிமாநதி) கொண்டாடப்படுகிறது. ஐப்பசி மாதத்தில் பலர் இங்கு வந்து தீர்த்த மாடிச் செல்வார்கள் இறந்தவர்களுடைய எலும்புகளை இந்துக்கள் இங்கு ஓடும் நதியில் போடுகிறார்கள்.

இவ்வூர் கோவிலில் ஆனி மாதத்தில் ஒரு திருவிழா நடக்கிறது. அதற்கு நாற்று நடவுத் திருவிழா என்று பெயர். அதன் விபரம் வரு மாறு: அந்தத் திருவிழா காலத்தில் பட்டீஸ்வரரையும்,பச்சை நாயகி யையும், உழவர்களைப் போல் அலங்கரித்து வயல்களுக்கு எழுந்தருளச் செய்வார்கள். அங்கே சுவாமியும், அம்மனும் நாற்று நடும் பாவனை யைக் காண்பிப்பார்கள். திரும்பவும் சுவாமியைக் கோயிலுக்குக் கொண்டு போவார்கள். இந்தத் திருவிழா இப்படி நடப்பதற்கு ஒரு கதை உண்டு.

முன்னொரு காலத்தில் சுந்தரமூர்த்திநாயனார் என்ற சிவபக்தர் ஸ்தல யாத்திரை செய்துகொண்டு இந்த ஊருக்கு வந்தார். அவருக் குத் தரிசனம் கொடுக்கப் பேரூர்ச் சிவபெருமானுக்குப் பிரியமில்லை. சுவாமி அம்பிகையுடன் வயலுக்குச் சென்று விட்டார். போகும் போது நந்தியை அழைத்துத் தாம் சென்ற இடத்தை சுந்தரமூர்த்தி நாயனாருக்குச் சொல்லக்கூடாது என்று கட்டளையிட்டு இருந்தார். சுந்தரமூர்த்தி நாயனார் கோவிலில் வந்து சுவாமியைப் பார்த்தார். சுவாமி காணப்படவில்லை. சுவாமி எங்கே என்று நந்தியைக் கேட்டார். நந்தி பதில் சொல்லவில்லை. பதில் சொல்லாவிட்டால் சபித்து விடு வேன் என்று நாயனார் கூறினார். நந்தி வாயால் சொல்லாமல் தன் தலையைத் திருப்பி சுவாமி சென்ற திசையைக் காண்பித்தார். நாயனார் அத்திசையிலிருக்கிற வயலுக்குச் சென்று பதிகம் பாடினார். சுவாமி கோயிலுக்கு வந்தார். நந்தி செய்த குற்றத்திற்காக அதனுடைய கீழ் வாயை வெட்டி விட்டார். இக்கோயிலுள் இருக்கிற நந்தியின்கீழ் வாய் நறுக்கப்பட்டிருப்பதை இன்றும் காணலாம்.

**திரு ஏ. கே. சாமி — சென்னை-4.**

## துளசியும் வில்வமும்!

சிவன் கோவிலுக்கு வில்வமும் பெருமாள் கோவிலுக்குச் துளசி யும் ஸ்தல விருட்சம் என்பது சம்பிரதாயம். ஆனால் ஸ்ரீமுஷ்ணம் என்ற ஊரில் சிவன் கோவில் ஸ்தல விருட்சம் துளசி. பெருமாள் கோவில் ஸ்தல விருட்சம் வில்வம்!

**திருமதி கமலா மாரியப்பன் — கோயம்புத்தூர்.**

தீபத்தை வழிபடுவதை வழக்கமாகக் கொண்டிருந்தார் என்ற விவரம் அயினி அக்பரி என்ற நூலின் மூலம் தெரிய வருகிறது. அக்பா தீபா வளிக் கொண்டாட்டங்களில் கலந்து கொண்ட செய்தியும் கிடைக்கிறது. தீபாவளியில் பட்டாசு வெடிக்கும் வழக்கத்தை ஏற்படுத்தியவர் பாபர் என்ற மொகலாய சக்ரவர்த்தியே. தீபாவளிக்கான வாணவகைகளைச் செய்வது பற்றி ஒரிஸ்ஸாவைச் சேர்நத ருத்ரதேவரின் ஜாதக சிந் தாமணியிலும், ஆகாச பைரவ கல் பம் என்ற பழம் பெரும் ஏட்டுச் சுவ டியிலும் செய்திகள் உ ள ள ன. எனவே வாண வகைகள் தயாரிப்பில் சீனத்திற்கும் நம் பாரதமே முன் னோடி.

சந்திரகுப்த விக்ரமாதித்தன் பார தம் முழுவதும் வென்று அசுவ மேதம் செய்து தீபாவளியன்றுதான் அரசுக்கட்டில் ஏறியதாக சரித்திரம் கூறும். ஸ்ரீராமபிரான் வனவாசம் முடிந்து நாடு திரும்பிப் பட்டாபி ஷேகம் செய்து கொண்டது தீபாவளி யில் என்றே கூறப்படுகிறது. பண் டைய ஹிந்து மன்னர்கள் மஹா பலியை வாழ்த்தி இந்த தீபாவளி யைக் கொண்டாடியதாகத் தெரி கிறது. சங்க காலத்திற்கு முற்பட்ட தொல்காப்பியத்தில்கூட தீபாவளி பற்றிக் குறிப்பு இருப்பதாகக் கூறப் படுகிறது.

மகாராஷ்டிரத்தில் தீபாவளியைத் தாம்பூலம் போடும் திருநாள் என்று அழைக்கின்றனர். வ ங் கா ள த் தி ல் தீபாவளியில் பவானி பூஜையைச் சிறப்பாகச் செய்கின்றனர். குஜ ராத்தியர் தீபாவளி அன்று மஹா லக்ஷ்மியையும் குபேரனையும் பூஜித்து வற்றாத செல்வமருள வேண்டுகின்ற னர். உத்தரபிரதேச மத்தியபிர தேச மக்கள் கங்கைக்குப் பூஜை செ ய் து சருகுப்பட்டையாலான விளக்குகளை ஏ ற் றி கங்கையில் மிதக்கவிட்டு கங்கையையே ஒளி வெள்ளத்தில் ஆழ்த்துகின்றனர். வடக்கே பட்டாசுகட்கு அதிக முக்கி யத்துவம் கொடுப்பதில்லை. அவர் கள் விளக்கை ஏற்றி ஒளியை வழிபடு கிறார்கள். நாம் பட்டாசு வாண வகைகளை ஏற்றி ஒளிமயமாக்கு கிறோம். அறிவுக் கனலாகிய ஒளி நம்முள் ஏற்பட்டால் அக்ஞானம் என்ற இருள் அழியும். இதுவே தீபாவளியின் தத்துவம். ✠

# தீப ஒளித் திருநாள்

திரு வெ சுந்தரம்-பரமக்குடி

முகவுரை :

தீபாவளி என்றாலே சிறுவர் முதல் பெரியோர் வரை, ஏழை முதல் செல்வந்தர் வரை அவரவர் சக்திக்கேற்ப மகிழ்வுடன் கொண்டாடுவது என்பது யாவரும் அறிநததே! தேசிய ஒருமைப்பாட்டை விளக்கவல்லத் திருநாள் இது என்பது மறுக்க முடியாத உண்மை.

சிறுவர் சிறுமியர்கட்கும், புது மணத் தம்பதியினர்கட்கும் பெரு மகிழ்வைத் தரும் விழா இது. ஆனால் பெண்ணுக்குத் திருமணம் செய்வித்த கையோடு தலைத் தீபாவளி வந்து விட்டதே என ஏக்கமுறும் பெண் பெற்றோர்கூட, மகளும் மருமகனும் தலைத் தீபாவளிக்குத் தன் வீட்டிற்கு வந்து கொண்டாடும்போது, கவலைகளெல்லாம் மறந்து, இருளகற்றி ஒளிதரும் தீப ஒளி போன்று தம் மக்கள்—புதுமணம் முடித்தவர்கள் புத்தாடை சரசரக்க தீபம் ஏற்றி விழாக் கொண்டாடி வணங்கி ஆசி பெறும்போது ஒளிமிக்கப் பிரகாச மான வாழ்க்கையினைப் பெற்று உயர்வடைய வேண்டுமென்று வாழ்த்துவது கண்கூடு.

தீபாவளி என்பதை இப்புண்ணிய பூமியிலே அதிகாலைப் பொழுதான "ப்ராத:" காலத்தில் எண்ணெய் தேய்த்து வெந்நீரில் ஸ்நாநம் செய்து புத்தாடை உடுத்தி மகாலக்ஷ்மியையும், திருமாலையும் வழிபட்டு, பெரியோர்களை வணங்கி ஆசி பெற்று, ஜாதி, மத, இன பேதமின்றி உறவினர்கட்கும், நண்பர்கட்கும் பல் வகைத் தின்பண்டங்கள் கொடுத்தும் உபசரித்து மகிழ்வினைப் பங்கு கொண்டு பேரின்பம் கொள்கின்றனர். சிறுவர் முதல் பெரியோர் உள்ளிட்ட அனைவரும் வெடி வகைகளைக் கொளுத்தி மகிழ்கின்றனர். இவை யாவும் ஒவ்வொரு ஆண்டும் நடைபெறுவதுதானே என எண்ணலாம். அதன் உட்பொருள் உணரப்பட வேண்டாமா?

புராண வரலாறு :

நரகாசுரன் என்ற ஓர் அரக்கன் மகா பலம் மிக்கவனாய் தேவதைகளை இம்சித்தும், தேவ, மனித கன்னிகைகளைச் சிறைப்படுத்தியும் துன்புறுத்தி வந்தான். இத்துன்பத்திலிருந்து விடுபட தேவேந்திரன், துவாரகையில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ கிருஷ்ணனை வணங்கி, பூமிதேவியின் புதல்வனான நரகன் என்ற அசுரன் கொடுத்து வரும் தொல்லைகளால் அளவற்ற துன்பம் பெற்று வருவதையும், ஸ்ரீ கிருஷ்ணன் காக்கும் தெய்வமான காரணத்தால் நரகாசுரனின் இடர்களிலிருந்து காத்து ரக்ஷிக்க வேண்டுகிறான். ஸ்ரீ கண்ணனும் அவ்வாறே செய்வதாக வாக்களிக்கின்றனர்.

சத்ய பாமாவுடன் கண்ணன் கருடன் மீதேறிக் கொண்டு "ப்ராக் ஜோதிஷபுரம்" சென்றார். நரகாசுரனின் அமைச்சரான "முரன்" என்பவன் முதலில் எதிர்க்கின்றான். அவனைக் கொன்று "முராரி" ஆகின்றார் ஸ்ரீ கிருஷ்ணன். கடைசியாக நரகாசுரனோடு யுத்தம் செய்து தனது சக்கராயுதத்தால் நரகனைக் கொன்றார். அப்போது பூமிதேவியானவள் ஸ்ரீ கண்ணனிடம் வந்து, "வராக அவதாரமெடுத்து பூமியைக் காத்த சமயம் உமது ஸ்பரிசத்தால் இவன் எனக்குப் பிறந்தான். அவன் இறப்புக்கும் தாங்களே காரணமானீர்களே", எனக்கூறி வருந்தினாள்.

ஆனால் அதே சமயம் நரகன் என்ற தீய குணத்தான் அழிந்து, நல்ல புதிய சரீரத்தைப் பெற்றான். நற்குணவானாகிக் கண்ணனின் அனுக்கிரகத்தால், திருமாலின் கருணையால் சிறப்பான உயர்தன்மை பெற்று விட்ட தன்மையுடன் ஸ்ரீகிருஷ்ணனிடம்,"இன்றையத் தினம் தீமையழிந்து நன்மை பெறப்பட்ட தன்மையானதால் இதே நாளனறு எல்லா மக்களும், உம்மை வணங்கி நான் புதுவாழ்வு பெற்றுள்ளது போல ஒளி மிக்க வாழ்வு பெறட்டும்," எனக் கோரினான்.

அன்றுமுதல், கண்ணனின் அருளைப் பூரணமாகப் பெற அஞ்ஞான இருள் நீங்கி மெய்ஞ்ஞான ஒளிபெற தீப ஒளித்திருநாள் தொடர்ந்து கொண்டாடப்படுகிறது. தீமைகள் அழிய, நன்மைகள் துலங்க நாடு முழுதும் கொண்டாடும் தீபாவளியாகத் திகழ்கின்றது. கண்ணனின் அருள் வேண்டி, அன்பினோடு பக்தி செய்யும் நாளாக விளங்குகிறது.

கங்கா ஸ்நாநம் :

ப்ராத:காலமான மிக அதிகாலைப் பொழுதில் எண்ணெய் தேய்த்துக் குளிப்பது மகா பாபமென்றும், அதற்கு பிராயச் சித்தமே கிடையாதென்றும் சாஸ்திரம் கூறுகிறது. ஆனால் தீபாவளித் திருநாளில் மட்டும் அதிகாலைப் பொழுதான ப்ராத: காலத்தில் எண்ணெய் தேய்த்துக் குளிக்க அனுமதிக்கப்படுகிறது. அம் மட்டோ, வெந்நீரில் குளித்தாலும் கூட "கங்கா ஸ்நாநம் ஆயிற்று!" எனக் கேட்பது நடைமுறையில் உள்ளது. இதன் காரணம் யாது?

எண்ணெயில் ஸ்ரீ லக்ஷ்மிதேவியும், நீரில் கங்கா தேவியும் இருப்பதாக சாஸ்திரங்கள் கூறுகின்றன. குறிப்பாக தீபாவளித் திருநாளில் எல்லா நீரிலும் கங்கை நிறைந்துள்ளதாகவும்



நம் பாபங்கள் அகலத் துணை புரிவ தாகவும் கூறப்படுகிறது.

நமது தாரித்ரியம் தொலைவதற் கும், ஸ்ரீ லக்ஷ்மி கடாக்ஷம் பெறு வதற்கும், ஸ்ரீ லக்ஷ்மியும் கங்கா தேவியும் நமக்கு அருள் பாலிக்கவே எண்ணெய் தேய்த்துக் குளித்தல் ஏற் படுத்தப்பட்டது. சர்வ சம்பத்துக் களும் பெறுவதற்காக புதிய ஆடை யணிந்து, புண்ணிய மனத்தோடு ஸ்ரீ லக்ஷ்மி சமேத மகாவிஷ்ணுவை வணங்குதல் ஏற்படுத்தப்பட்டது.

"தைலே லக்ஷ்மீ, ஜலேகங்கா தீபாவளி
திநே வஸேத்
அலக்ஷ்மீ பரிகாரார்த்தம் அபயங்க
ஸ்நான-மாசரேத்
தத ஆபரணம் வஸ்த்ரம் தாரயேத்
சர்வசம்பதே!
—சார சங்ரஹம்.

### தீபாவளி :

தீபாவளி என்னும் வார்த்தை தீபம்+ஆவளி எனப்பிரிக்கப்படும் போது தீப வரிசை என்ற பொருளா கும். இப்பொருளைக் கொண்டே வடநாடு முழுவதும் தீபாவளி நாளில் தீபங்களை நிரம்ப ஏற்றி வரிசை வரிசையாக வைத்து, தீப அலங்கார வரிசையிலே, ஒளி வெள்ளத்திலே உள்ளம் கொள்ளை கொள்ளும் தன் மையுடன் வாழ்க்கை முழுதும் ஒளி மயமான பிரகாசமானதாக அமைய பூசைகள் செய்கின்றனர். இனிமை என்றும் இலங்கிட இனிப்புப் பண்டங் கள் தயாரித்து உற்றார், உறவினர் களுக்குமளித்து மகிழ்வடைகின் றனர்.

தமிழகத்திலே கார்த்திகை மாதத் தில் வரும் திருக்கார்த்திகையும் பௌர்ணமியும் இணைந்த நல்ல நாளில்தான் தீப+ஆவளி யாக தீபங் களை வரிசை வரிசையாக ஏற்றி வைத்து வழிபடுகின்றனர். தீபாவளி நாளில் இதுபோல் செய்வது மிக அரிதே! தீப ஒளிக்கு முக்யத்வம் தீபாவளி நாளில் நம் நாட்டிலே கொடுக்கப்படவில்லையே ஏன்?

### தீப ஒளி ஏன் இங்கு இல்லை?

நம் நாட்டில் தீப ஒளித் திரு நாளாகத் தீபாவளி கொண்டாடப் படுவதில்லை என்பதனுல் தீபாவளி என்ற பெயருக்கும், விழாவிற்கும் சம்பந்தமில்லையே எனக் கருதுதல் தவருகும். நம் முன்னோர் ஏற்படுத் திய எந்த ஒரு செயல்பாட்டிலும் ஏதேனும் காரணம் இல்லாமல் இருக்க வழியே இல்லை. இதன் காரணம் யாது என உய்த்துணர வேணடிய தன்மைதான் முக்கியம். அப்போதுதான் நாம் உண்மை உணர் வதோடு வளரும் தலைமுறையான சிறார்களுக்கும் நேரிய வழியை, உயர் வழியை வகுத்துக் காட்ட முடியும்.

இக்காரணம் பற்றியே பல பெரி யோர்களிடம் அணுகி உண்மைக் கருத்தை உணர முற்பட்டேன். பல பெரியோர்களின் கருத்துக்கள் ஏற் புடையதாகத் தெரிந்தது. எனவே அவைகளைத் தொகுத்து உங்கள் முன் படைக்கின்றேன்.

### தீபாவளியும் தீப ஒளியும் :

தீப ஆவளியாகத் தொடர்ந்து தீப ஒளியாக முடிக்கப்பட வேண்டிய பெருவிழாவாகும். குடும்பத்தின் ஒளி விளக்காகத் திகழும் பெண்கள் ஒவ்வொரு இல்லத்திலும் கலையழ குடன் தீப ஒளியாக இல்லறத்தை இனிதாக்குபவர்கள் தீப ஒளி ஏற்று கின்றனர். தீபாவளியன்று இரண்டு தீபங்கள் ஏற்றுதல் மரபு. கணவனும் மனைவியும் இணைந்து இல்லத்தின் இனிமை மிக்க ஒளி வாழ்வினைப் பெற வேணடும் என விளக்குவதே இரு விளக்கு ஆகும்.

தீபாவளியன்று இரண்டு தீபம், மறுநாள் நான்கு தீபம், அதற்கு மறு நாள் ஆறு தீபம் என ஒவ்வொரு நாளும் இரண்டிரண்டு தீபங்களால் அதிகப்படுத்திக்கொண்டே செல்வ தானது கார்த்திகை மாதம் திருக் கார்த்திகை நாளில் பற்பல தீப ஒளி மிக்க அலங்காரத்தில் நிறைவுறச்

செய்வதே இவ்விழாவின் முக்கிய நோக்கம். திருக்கார்த்திகை நாள் ஜோதி வடிவாக சிவபெருமான் காட்சி தரும் நாள் அல்லவா?

தீபாவளி நாள் திருமாலுக்குகந்த நாள். இந்நாளில் துவங்கப்பெறும் தீப ஆவளி என்ற தீப வரிசை, சிவனுக்கு உகந்த நாளான திருககார்த்திகை நாளில் ஒளிவெள்ளமாக ஜோதிமயமாக முடிக்கப்படுகிறதெனின் ஹரியும், ஹரனும் ஒன்றே எனும் அரிய கருத்தை விளக்குவது தானே!

திருமால் தீபமாகவும் திருமாலின் தேவியான பிராட்டியாரோ ஒளியாகவும் விளங்குவதை விளக்கும் ஒளியாக, வாழ்க்கை ஒளிவிளக்காக அமைய வேணடியதை வற்புறுத்தவே அமைக்கப்பட்டதாகக் கொள்ளலாமன்றோ? இதனாலேயே திருமாலுக்கு தீபப் பிரகாசன் என்ற திவ்ய திருநாமம் உள்ளது என்பது வைஷ்ணவ சித்தாந்தம் ஆகும்.

இறைவன் ஒளிப்பிழம்பானவன். ஒளியின் சக்திக்கு ஆதாரம் மலைமகளின் சக்தி. எனவே சக்திமிக்க ஒளிப்பிழம்பான இறைவனின் தன்மையை விளக்க, திருவண்ணாமலையில் ஒளிமயமான, இறைஜோதி வடிவான சிவசக்தியை வழிபட்டு இல்லற வாழ்வில் பிரகாசமான வாழ்க்கையை ஏற்படுத்திக்கொள்ள அமைக்கப்பட்டது. இது சைவ சித்தாந்தம்.

சைவமாயினும் சரி, வைணவமாயினும் சரி சித்தாந்தம் எனும் உட்பொருள் ஒன்றே. ஆணும் பெண்ணும் தீபமும் ஒளியுமாக இணைந்து இல்லறத்தில் இனிமை காணல் வேணடும் என்பதுதானே இரு சித்தாந்தங்களின் ஒன்றுபட்ட உயர் கருத்து.

ஹரியும் சிவனும் ஒன்றே என்ற தத்துவத்தை விளக்கவே தீபாவளித் திருநாளில் அதாவது ஐப்பசி மாதம் அமாவாசையில் தொடங்கப்பெற்று கார்த்திகை மாதம் திருக்கார்த்திகையும் பௌர்ணமியும் கூடிய காலத்தில் நிறைவு செயயப்படுகிறது. தினமும் இரண்டிரண்டு தீபங்களாகக் கூட்டிககொண்டே செல்வது தினமும் தம்பதிகளின் கூடிச் செயலபடும் நல்லறங்கள் கூடிககொண்டே செல்ல வேணடும் என்பதைத்தானே வலியுறுத்துகிறது. இது தினமும் தீபங்கள் ஏற்றித்தொழும் பெண்கள் இறைவனை வேண்டும் வேள்வி என்பதில் ஐயமில்லையே!

அறிவியல் நோக்கு :

ஐப்பசியும் கார்த்திகையும் மழை மிகுந்த குளிர் நிறைந்த மாதங்கள். கார்காலமானதால் இருள் அடர்ந்த காலமாக அமைந்தன. இப்படிப் பட்ட சூழ்நிலையில் பாக்டீரியாக்களும், வைரஸ்களும் நிரம்பத் தோன்றி மாந்தர்க்குத் துன்பம் விளைவிக்க வாய்ப்பான காலம். சிறு பூச்சிகள், புழுக்கள், விஷ ஜந்துக்கள் வீடுகளுக்குள் வராமலும், நாம் ஒளி மூலம் கவனித்து அழிப்பதோடு, தீப ஒளியில் கவரப்பட்டு, ஒளிச் சுடரில் கிருமிகள், பூச்சிகள் மாய்ந்து விடவும் வாய்ப்பாகும். இருள் நீக்கி மருளகற்றி ஒளி நிரம்பிட வழிவகையாகும்.

இறைவழிபாட்டு முறைகளால் சுத்தமும் சுகாதாரமும் பேணப்படுகின்றன. குளிர் ஈரப்பதனால் மானிடர் உடலில் சோர்வும், நரம்புகள் பிடிப்பும், தசைநார்கள் சுருங்குதலும், செயல்பாடுகளைக் குன்றச் செய்யும். இவையாவும் நீங்கிப் புத்துணர்ச்சியும், பொலிவும், உடல் ஆரோக்யமும் ஏற்பட, குளிரினின்றும் மாறுபட்டு நிலையான வெப்பத் திறன் பெற, சுறுசுறுப்புடன் செயல்பட, பக்தியுடன் கலந்த அறிவியல் பூர்வமாக இப்படி இரு விழாக்களையும் இணைத்துள்ள பாலமாக இருப்பதை உணரும்போது வியப்புத்தான் மேலிடுகிறது.

தீபாவளியன்று வெடி வகைகளைக் கொளுத்தி மகிழ்வதுதான் நாம் உணர்ந்துள்ளதாகும். வெடி வகைகளைக் கொளுத்தியபின், அவைகளில் உள்ள கந்தகம் போன்றவை புகையாகிக் காற்றில் கலந்து நச்சுப் பொருள்களை அழிக்கின்றதென்பதையும் அறியும்போது—அறிவியலுடன் இணைந்த இப்பெருவிழா தீபாவளி சிறப்புறக கொண்டாடும்போது—அதன் நோக்கம் புரியும்போது-ஜாதி, சமய, மத வேறுபாடின்றி ஒருமைப் பாட்டைவிளக்கும்நற்பெருவிழா இது என்பதுதெள்ளத்தெளியப் புலனாகும்.

நிறைவாக :

பெண்கள் வேள்வியாக நடத்தும் இவ்விழாக்களில், பெண்களுக்கு மிக முக்யதவம் கொடுத்து, பெண்ணும் ஆணும் இணைநத வாழ்வே பேரின்ப நல்வாழ்வு என்பதை ஏனோ மறந்து, இக்காலத்தில் வரதக்ஷிணைக் கொடுமையால் பெண்களையே ஜோதியுள் புக வைக்கும் கொடுமைகள் நிகழா வண்ணம் மாற்ற உறுதி கொள்ள வேண்டும். இனிப்பான பல்வகைப் பண்டங்கள் தந்து, இனிய வாழ்வுக்கு வழிகாட்ட இறைவனை வேண்டுவது மட்டுமல்ல இல்லறத் தலைவர்களையும்தான் வேண்டுகிறார்கள் என்பதை உணர வேண்டும். பெண்மை போற்றி பாதுகாககப்பட வேண்டுமென்றே கங்காதேவி, லக்ஷ்மிதேவி, கௌரி பூசை என முறைப்படுத்தப் பட்டுள்ளவற்றை அறிந்து, நடைமுறையில் பெண்கள் உரிமைகளைப் பாதுகாக்கத் துணையாக ஆணகள் அமைய வேண்டும்.

உலகம் யாவும் ஒன்றே! உயிர்கள் யாவும் ஒன்றே. உண்மைப் பொருளாம் இறைவனும் ஒன்றே. பெண்மையும் ஆண்மையும் இணைந்த வாழ்க்கை நன்றே என்ற கருத்தை உணர்ந்து சிவசக்தியான ஜோதியையும், லெக்ஷ்மீநாராயணனையும் உள் என்புடன் போற்றிப் பணிந்து, நம்மைவிட நலிந்தோர் வாழ்வு நலமுடன் ஏற்றம் பெற, நம்மால் முடிந்ததை நல்கி ஏழையின் சிரிப்பிலே இறைவனைக் காணும் தொண்டுள்ளம் கொண்டு வாழ்வதே இறைவன் கருணைக்கும் அருளுக்கும் பாத்திரமாகும் வழியாகும்.

பெண்மைச் சிறப்பைப் பொலிவாக்கும இவ்விழாக்களை ஏதோ சடங்காக நடைபெறச் செய்வதை விடுத்து உண்மையுணர்ந்து பக்தியும் சக்தியும் கொண்டு பார் போற்ற வாழ்வாங்கு வாழ கங்கா ஸ்நாநம் செய்து நற்பணிகளைத் தொடருவோம். 卐

தமிழகத்தைப் போலவே பல்வேறு கலைகளின் பிறப்பிடமாகக் கேரளமும் விளங்குகிறது. கதகளி, மோகினியாட்டம், அஷ்டபதி ஆட்டம், இராமனுட்டம், கிருஷ்ணனுட்டம், ஓட்டன் துள்ளல், கூடியாட்டம், கோல்க்களி, திருவாதிரைககளி, தெய்யம் முதலிய எண்ணற்ற கலைகளின் பிறப்பிடம் கேரளமே. மேற்சொன்னவற்றுள் பலதும் கோயிற்கலைகளாகும். வெகு காலமாக இக்கலைகள் கோவில்களிலேயே அரங்கேற்றப்பட்டு அங்கேயே நடத்தப்பட்டன. ஆனல் தற்பொழுது இந்நிகழ்ச்சிகள் பொதுமேடைகளிலும் நடத்தப்படுகின்றன. இக்கலைகளின் பெருஞ்சிறப்பு என்னவெனில் இவைகள் எல்லாவற்றிலுமே கிராமிய மணம் வீசும் என்பதுதான். பண்டைய கேரளமரபை உணர விரும்புவோர் இக்கலை நிகழ்ச்சிகளைச் சில

# கதகளி

முறை பார்த்தாலே அதன் சிறப்பை உணர்ந்து கொள்ளலாம். எளிமையும் இனிமையும் இக்கலைகளின் அடிப்படைத் தத்துவங்களாக இலங்குகின்றன.

கேரளத்தில் பிறந்த கலைகள் அனைத்திற்கும் சிகரமாக விளங்குவது கதகளியாகும். இது யாரால், என்று தோற்றுவிக்கப்பட்டது என்பதற்குத் தக்க சான்றுகள் இல்லையெனினும் கொட்டாரக்கரை அரசராகவிருந்த மானவதேவரின் காலத்தில் அங்குள்ள கணபதி கோவிலில்தான் முதல் முதலாக இந்நிகழ்ச்சி அரங்கேற்றப்பட்டதாகச் செவிவழிச் செய்திகள் கூறுகின்றன. வாழ்க்கையில் மக்கள் மேற்கொள்ள வேண்டிய உயர் தத்துவங்களையும், நமது கலாச்சாரச் சிறப்பையும், பண்பாட்டு மேன்மைகளையும் எடுத்தோதும் புராணக் கதைகள் கதகளி நிகழ்ச்சிகளாக நடத்தப்படடதாலும, ஒழுககத்தையும் பக்தியையும் வளர்க்கிறது என்பதாலும் ஆரம்பக்காலம் முதலே கதகளி ஒரு தெய்வீகக் கலையாகக் கருதப்பட்டு ஆண்டுக்கொரு முறையாவது கேரளக் கோவில்களில் நடத்தப்பட்டன. இந்நிகழ்ச்சியைப் பார்த்து தீய நடவடிக்கைகள் செய்த பலரும் மனநதிருந்தியிருக்கிருர்கள்.

கதகளி பல்வேறு கலைகளின் சங்கமமாகும். நாட்டியம், சங்கீதம், வாத்தியம் இன்னேரன்ன பல கலைகள் இணைந்ததுதான் கதகளி. இந்தக் கலையை ஓரளவுக்கு நல்ல முறையில் பயின்று தேர்ச்சி பெற குறைந்த பட்சம் பன்னிரெணடு ஆண்டுகளாவது ஆகும். பரத நாட்டியம் போன்ற கலைகளைப் போலல்லாமல் இதனைப் பயில்வதற்கு அதிக விடாமுயற்சியும், கலையின் பால் பக்தியும் அவசியம் தேவை. அத்துடன் இடைவிடாத கடினமான பயிற்சிகள் மேற்கொள்ள வேண்டியிருக்கிறது. குருகுல முறைப்படியே இன்றும் இக்கலையைப் பயில வேண்டும். பயின்று தேர்வதற்குள் கதகளிக் கலைஞன் படும் துன்பங்களும், இன்னல்களும் ஏராளம். அதஞல் இதனைப் பயில முன் வருவோர் தொகை மிகவும் குறைவாகவே இருக்கிறது. அதிலும் குறிப்பாகப் பெண்கள் இக்கலையின் பால் அதிக நாட்டம் கொள்வதில்லை.

நாட்டிய சாத்திரம், அபிநய தர்ப்பணம் முதலிய நூல்களில் கூறப்பட்டுள்ள அனேகவிதமான முத்திரைகள், கால் பிரயோகங்கள், அசைவுகள் இவைகளிலிருந்து வேண்டுவனவற்றைத் தேர்ந்தெடுத்து இங்கு சேர்த்திருக்கிருர்கள். சான்ருக கால்கள் இரண்டையும் ஒன்ருகச் சேர்த்து வைத்தால் சமபாதம், இருகால்களும் ஒரு சாண் தள்ளி வைத்துக் கால்களை விரித்து வைத்தல் ஆயதம், வலது கால் இடது காலுக்கு மூன்று சாண் முன்னுக வைத்தல் பிரத்தியாலீடம், ஒரு கால் ஒரு பக்கத்தில் நீட்டினல் பிரேங்கணம், இரு கால்களும் மூன்று சாண் அளவில் விரித்து வைத்தல் பிரேரிதம், காலகளைப் பிணைத்து வைத்தல் ஸ்வஸ்திகம், ஒரு கால் மற்ருெரு காலின் முழங்காலில் வைத்து நிற்றல் ஏகபாதம், ஒரு காலில் அடுதத கால் வைத்து சம்மணம் படிந்து இருத்தல் பிரம்ம ஸ்தானம். இவ்வாறே ஒவ்வொரு நிலைக்கும் பெயரும் இலககணமும் கூறப்படும்.

மேற்சொன்ன நூல்களுள் கூறப்படாத சில முத்திரைகள், திரும்புதல்கள் முதலியவைகளையும் இங்கு சமயோசிதமாகக் கையாளுகிருர்கள். கதகளி ஆரம்பிக்கப்பட்ட காலத்தில் ஆடப்பட்டிருந்ததிலிருந்து இன்று எவ்வளவோ வேறுபட்டிருக்கிறது. வேடஙகளுக்கும், ஆட்டங்களுக்கும் மாறுபாடுகள் தோன்றிவிட்டன.

---

**திரு கி. அரங்கசாமி, எம.ஏ,**
**பட்டாம்பி**

---

வெட்டன், தெக்கன், கல்லடிக்கோடன், கப்பிலங்காடன் என்று பல்வேறு வகைகள் தோன்றியிருப்பதின் அடிப்படை இந்த மாறுபாடுகள் தான். முத்திரைகளுககூட பொருள் மாறுபாடுகள் வந்துவிட்டன. பாட்டிலும், தாளத்திலும் கூட காலக்கிரமத்தில் மாற்றங்கள ஏற்பட்டுள்ளன. ஆனல் இந்த மாறுபாடுகள் இக்கலையின் மேன்மைக்கு மெருகூட்டியுள்ளதே தவிர அதன் தரத்தைக் குறைத்து விட்டதாகச் சொல்ல முடியாது.

கதகளி வாத்தியங்கள் நாலகு வகைப்படும். அவை ததம, அவநத்தம், கனம், சுஷிரம் என்பவையாகும்.

ததஞ்சைவாவநத்தம் ச, கனம்
சுஷிரமேவ ச
சதுர்விதம் ச விக்ஞேயம், ஆதோத்
தியம் லட்சணுநன்விதம்

ததம்=கம்பியினல் ஒலியெழுப்பும் வீணை முதலிய வாத்தியங்கள், அவ

நத்தம்=செண்டை, மத்தளம் போன்ற தோற்கருவிகள், கனம்= இலைத்தாளம் (ஜால்ரா போன்றது வெண்கலத்தால் செய்யப்பட்டிருக்கும். ஜால்ராவை விடப் பெரிதாகவும், அதிக ஒலியெழுப்புவதாகவும் இருக்கும்) சுஷிரம்=ஓடக்குழல் முதலியன. இவைகளை மேலும் மிருது, கனம் என இரண்டாகப் பிரித்திருக்கிறார்கள். வீணை, மிருதங்கம் முதலியன மிருது என்ற பிரிவிலும், செண்டை, மத்தளம், இலைத்தாளம் என்பவை கனம் என்ற பிரிவிலும் அடங்கும். சிலர் செண்டையை மிருது, கனம் என்ற இரு பிரிவிலும் அடக்கிக் கூறுவர்.

கதகளியில் வாத்தியக் கருவிகளைக் கையாள்பவன் மிகவும் சிரத்தையுடன் இருக்க வேண்டும். நடிகன் ஏற்றிருக்கும் பாத்திரத்திற்கேற்பவும், சந்தர்ப்பத்திற்கேற்பவும் அவன் கருவிகளை உபயோகிக்க வேண்டும். பொதுவாகக் கதைகள் புராணக் கதைகளாக இருப்பதால் கதாபாத்திரங்கள் வீரர்களாகவும், பராக்கிரமிகளாகவும், ரௌத்ர சுபாவம் உள்ளவர்களாகவும் இருப்பர். அந்தச் சமயத்தில் மேடையில் தோன்றும் பாத்திரம் சிறப்பாகத் தோன்றுவதற்கு வாத்தியக் கலைஞன் தனது கருவிகளை விழிப்புடனும், சிறப்பாகவும் கையாள வேண்டும். பொதுவாக ஆண்பாத்திரங்கள் தோன்றும் பொழுது கனவாத்தியங்களும், பெண் பாத்திரங்கள் தோன்றும்பொழுது மிருதுவான வாத்தியங்களும் உபயோகிக்கப்படுகின்றன. வாத்தியக் கலைஞன் தவறிழைத்தால் பாத்திரத்தின் சிறப்பு எடுபடாமல் போகும்.

இங்கு மத்தளத்தைப் பற்றி இரண்டொரு வரிகள் கூறுதல் வேண்டும். மத்தளமும் செண்டையைப் போலவே சில சமயங்களில் மிருது, கனம் என இரு வகையிலும் வாசிக்கப்படும். ரௌத்ர பாவத்தை வெளிப்படுத்தும் விதம் மத்தளம் உபயோகிக்கும் பொழுது செண்டையை உபயோகிக்க மாட்டார்கள். அது மட்டுமன்று. நிகழ்ச்சியில் எந்த வாத்தியத்தை வேண்டாமென்று வைத்தாலும் மத்தளத்தையும், இலைத்தாளத்தையும் வேண்டாமென்று வைப்பதில்லை. தொடக்கம் முதல் இறுதி வரை இவ்விரு வாத்யங்களும் இன்றியமையாதவையாகக் கருதப்படுகின்றன. எனவே கதகளியைப் பொறுத்த வரையில் இவ்விரு வாத்தியங்களுக்கும் மிகப் பெரிய ஸ்தானம் உண்டு. இவை கதாபாத்திரத்தின் சிறப்புக்குத் துணை புரிவதாக எண்ணப்படுகிறது.

கதகளியில் பாடல்கள் பொதுவாக எல்லா இராகங்களிலும் பாடப்படுகின்றன. கதகளிப் பாடகன் நல்ல சாரீரம் உள்ளவனாகவும், நீண்ட நேரம் பாடும் திறன் பெற்றவனாகவும் இருக்க வேண்டும். மெல்லிசை முதல் கர்னாடக சங்கீதம் வரை எல்லாவிதமான பாடல் வகைகளும் பாடும் வல்லமையுள்ளவனாக இருக்க வேண்டும். கதகளியை நடத்திச் செல்பவன் பாடகன் ஆதலால் அவனுக்கும் நல்லதொரு ஸ்தானம் கதகளியில் கொடுக்கப்படுகிறது.

கதகளி நடிகன் பாடல்கள், வாத்தியங்கள் என்பவைகளைக் கேட்டும், பாத்திரத்தின் இயல்புக்கேற்பவும் முத்திரைகளால் நடிப்பை வெளிப்படுத்துகிறான். நடிகன் பாடுவதோ பேசுவதோ இல்லை. மௌனமான மூலமாக நடிகன் நடிக்கிறான். கையால் முத்திரை காண்பித்தும் கண், உடல் முதலியவைகளால் அபிநயம் காண்பித்தும் அவன் கதையை நடத்திச் செல்ல வேண்டும். நடிகனே கதகளியின் முதுகெலும்பு. எனவே நடிகன்பால் ஏற்படும் எந்தத் தவறுமே நிகழ்ச்சியின் தரத்தைக் குறைத்து விடும். அடிக்கடி உணர்ச்சிகளை மாற்றத் தெரிந்த ஒருவனால் மட்டுமே நிகழ்ச்சி சிறப்பாக அமையுமெனலாம். இதற்கு அபாரத் திறமையும், நல்ல பயிற்சியும் பெற்றிருத்தல் வேண்டும்.

இனிக் கதகளி வேடங்களைக் குறித்துச் சில வார்த்தைகள் சொல்லல் அவசியம். அனேகமாக எல்லாக் கதாபாத்திரங்களுக்கும் வட்டமான, சற்றுப் பரந்த கிரீடம் இருக்கும். இது சற்றுக் கனமாக இருக்கும். கண்ணைப் பறிக்கும் வண்ண உடைகள் அணிந்து, கழுத்திலும், காதிலும் ஆபரணங்கள் அணிந்து மேல் துண்டு போன்ற ஒரு சிறிய, நீண்ட துண்டை கழுத்தில் போட்டிருக்க வேண்டும். பெண் கதாபாத்திரங்களுக்குக் கிரீடம் இல்லை. சற்று வித்தியாசமான வேடம் புனையப்படும். முகத்தில் சில வரைகள் வரைந்தும், கண்ணுக்கு மையிட்டும் பட்டை தீட்டியும் ஒப்பனை புனைகிறார்கள். கதகளி பயிற்சி கொடுக்கப்படும் பொழுதே ஒப்பனைப் பயிற்சியும் கலைஞர்களுக்கு அளிக்கப்படும்.

கதகளியும் நாட்டியமும் பின்னிப் பிணைந்து கிடக்கின்றன. கதகளி நடனம் லாஸ்யம், தாண்டவம் என இருவகைப்படும். இவற்றுள் தாண்டவத்திற்கே முக்கிய ஸ்தானம் கொடுக்கப்படுகிறது. லாஸ்யம் என்பது பொதுவாகப் பெண்கள் ஆடுவது. தாண்டவம் ஆண்களுக்குரியது.

கதகளி அபிநயம் என்பது வாசிகம் ஆங்கிகம், ஆஹார்யம், சாத்விகம் என நால்வகைப்படும். இவற்றுள் ஆங்கிகத்திற்கும், ஆஹார்யத்திற்கும் முக்யத்துவம் கொடுக்கப்படுகிறது. இவற்றின் இலக்கணம் இந்திய அபிநயக்கலை நூல்களில் மிக விளக்கமாகச் சொல்லப்பட்டபடியே பின்பற்றப்படும்.

இந்திய அபிநயக்கலைகளில் யுத்தம், வதம், மரணம் என்பவைகளை விலக்கியிருக்கிறார்கள். ஆனால் யுத்த பாரம்பரியம் நிறைந்த கேரள பூமியில் பாரத யுத்தத்தை அடிப்படையாகக் கொண்ட துரியோதன வதம் போன்ற கதைகள் நடத்தும்பொழுது யுத்தக் காட்சிகள் கதகளியில் காண்பிக்கப் படுகின்றன. அதே நேரத்தில் அதே அடிப்படையில் நடத்தப்படும் வேணி

சம்ஹாரம், ஊருபங்கம் போனற கதைகளில் யுத்தக் காட்சிகள் காண பிக்கப்படுவதில்லை.

கதகளி பயிற்றுவிக்கும் பள்ளிக்குக் களரி என்று பெயர். கதகளி அப்பியாசம் வெறும விநோதம் மட்டு மல்ல அது உடலுக்கும் மனதுககும் வலிமை தருவதோடு பொறுமை, அஹிம்சை போன்ற பண்புகளை கலைஞர்களிடையே வளர்க்கிறது. கதகளி படிப்பிக்கும் இடத்திற்குச் சென்று பார்த்தால் மாணக்கர்கள் மலர்ந்து படுத்திருப்பதைக் காணலாம். முகத்தில் ஒப்பனை செய்வதெப்படி என்பதைக் கற்பதற்காகவே அவர்கள அவ்வாறு படுத்திருக்கிறார்கள். படுத்திருப்பதன்மூலம் அவர்களுடைய மூச்சுக் கருவிகளுக்குப் போதுமான வலிமை கிடைக்கிறது.

கிழக்கில் விடிவெள்ளி தோன்றும் பொழுது மாணக்கர்கள் எழுநதிருந்து பாடல் பயிற்சி பெற வேண்டும். அதன் பின்னர் நின்ற இடத்திலேயே குதித்தல், கரணம் அடித்தல் இத்தகைய உடற்பயிற்சிகள் பெற வேண்டும். பின்னர் ஆசிரியர் அவர்களுடைய சரீரத்தில் எண்ணை புரட்டி நீவுவார். பின்னர் முறையான பயிற்சிகள் நடக்கும். பிறகு குளித்து தெய்வ தரிசனமும், அரச மரத்தை வலம் வரலும் செய்ய வேண்டும். காலையில் பயிற்சிகள் செய்வதாலும், குளிப்பதாலும் சரீரத்திற்குப் புத்துணர்ச்சி கிடைக்கிறது. அரச மரத்தை வலம் வருவதால் சுத்தமான காற்று சுவாசிக்கப்படுகிறது. கோவிலில் துளசி தீர்த்தம் அருநதுவதால் இரத்தம் சுத்தியாகிறது. கோவிலிருநது கிடைக்கும் கதலிப் பழத்தையும், வெண்ணையையும் உண்பதால் வயிறு சுத்தமாகிறது. சூரியோதயத்திற்குப் பின்னர் நெய் சேர்த்த கஞ்சி குடிக்கவேண்டும். இங்ஙனம் கடினமான பயிற்சியும், நல்ல உணவுப் பழக்கங்களும் கதகளி நடிகனுக்கு நல்ல ஆரோக்கியத்தையும் நீண்ட வாழ்நாளையும் தருகிறது.

அன்று ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீராமானுஜர் பெருமாளைச் சேவிக்க வந்திருந்தபோது பெருமாளுக்கு நல்ல ஜுரம். ஜுரத்திற்கு என்ன காரணம் என்று பெருமாளிடமே உடையவா கேட்டார். தளிகையில் ஏற்பட்ட கோளாறுதான் இதற்கு காரணம் என்றார் பெருமாள் இதைக் கேட்டதும் உடையவருக்கு உள்ளம் நொந்தது. 'ஏன? மடப்பள்ளி நாச்சியாா இங்கு இருககிறாரே, தளிகையை கவனிக்கவில்லையா?' என்றார் உடையவா. "அவளால் வந்த வினைதான் இது. தினம் விதம் விதமாய் பட்சணமும் பணிகாரமும் செய்து என வயிற்றைக் கெடுத்து விட்டாள். விருந்து வைக்கத் தெரிகிறதே தவிர, அவளுக்கு மருந்து கொடுக்கத் தெரியவில்லை" என்றார் பெருமாள்.

'அப்படியானால் மடப்பள்ளிக்கு ஒரு வைத்தியரையும் அத்யக்ஷராகப் போட வேண்டியதுதான்' என்றாராம் உடையவர்.

அப்படி அங்கு வந்த வைத்தியர்தான் இன்று நாம் காணும் தன்வந்தரி சன்னிதி.

— "பாகவத தர்மம்"

— தகவல்: திரு ஆர். சுப்பராவ்.

கதகளியில் காணப்படும் சில குறைகள் பற்றிச் சிந்திப்போம். பொதுவாகக் கதகளி நிகழ்ச்சிகள் இரவு பத்து மணிக்குமேல் தொடங்கிக் காலை நான்கு மணிவரை நடைபெறும். இவ்வளவு நீண்ட நிகழ்ச்சியை எவ்வளவுதான் அதில் ஈடுபாடுள்ளவரேனும் முழுவதும் பார்ப்பதில்லை. அதனால் நிகழ்ச்சியின் நீளத்தைக் குறைக்க வேண்டும் என்ற கருத்து வெகு நாட்களாகவே நிலவி வருகிறது.

புராணக் கதைகள் மட்டுமே கதகளி நிகழ்ச்சிகளாக நிகழ்த்தப்படுகின்றன. அதனால் கதை தெரிந்தவர்களால் மட்டுமே அதை நன்கு இரசிக்க முடிகிறது. அதை மாற்றி நவீன கதைகளையும் புதிய பாணியில் நிகழ்ச்சிகளாகத் தர வேண்டுமென்று கருதுகிறவர்களும் உண்டு.

நவீன வாத்தியக் கருவிகளைப் புகுத்த வேண்டுமென்றும், நிகழ்ச்சியின் ஆரம்பத்தில் நடத்தப்படும் அரங்க பூஜையின் நீளத்தைக் குறைக்கவேண்டுமென்று சொல்வோரும் உண்டு.

இந்நூற்றுண்டின் ஆரம்பத்தில் இக்கலை யாரும் கேட்பாரற்ற நிலையில் பொலிவு குன்றியிருந்தது. தமிழக அரசவைக் கவிஞராக இருந்த மகாகவி அமரர் வள்ளத்தோள் நாராயண மேனோன் அவர்கள் எடுத்துக் கொண்ட பெரு முயற்சியினால் தான் இக்கலை அழிந்து போகாமல் காப்பாற்றப்பட்டது. அப்பெரியார் பாலக்காடு மாவட்டம் சொர்ணூர் அருகே செருதுருத்தி என்ற இடத்தில் 1930ல் ஒரு கதகளிப் பயிற்சிப் பள்ளியை நிறுவினர். கேரள கலா மண்டலம் என்ற பெயரில் அறியப்படும் இந்நிறுவனம் இதுவரை அனேகம் பேருககுக் கதகளிப் பயிற்சி அளித்திருக்கிறது.

கேரளத்தில தோன்றிய கதகளி இந்தியப் பண்பாட்டின் பெருமையை எடுத்துக் காட்டும் ஓர் உயர்கலையாகும் அதனைப் பாரதத்திறகுத் தந்த கேரளக் கலைஞர்கள் நமது மதிப்பிற்கும் மரியாதைக்கும் என்றென்றும் உரியவராவர்.

*

# புகழுநல்லொருவனென்கோ!

திரு. கே. எஸ். கிருஷ்ணன், எம்.ஏ.,
திருநெல்வேலி டவுன்

**வே**தம் தமிழ் செய்த மாறன் என்று பாராட்டப்படும் சுவாமி நம்மாழ்வாரது அருள் மொழியான திருவாய்மொழியிலுள்ள 100 பதிகங்களும் தனித்தனியாக ஒவ்வொரு விதத்தில் சிறப்புடையவை. தானான தன்மையில் பாடப்பட்டிருக்கும் 73 பதிகங்களும், அகப்பொருள்பொதிந்து பாடப்பட்டிருக்கும் 27 பதிகங்களும் அடியார்களின் உள்ளத்திற்கு இனபத்தையும் அமைதியையும் அளிக்கின்றன. அவற்றுள் சில படிப்போரின் மனத்தைப் பரவசப்படுத்தும் பெருமை வாய்ந்தவைகளாக இருக்கின்றன. அவ்வாறான பதிகத்தின் முதற்பாசுரத்தை இப்போது அனுபவிப்போம்.

நம்மாழ்வாருடைய உள்ளம் குழந்தை உள்ளம். இறைவனின் அன்புக் குழவி. இறையன்பு நிறைந்த உள்ளம். அவனுடைய ஒப்பற்ற ஒளி மணிவண்ணத்தைக் கண்ணுற்ற ஆழ்வார் இறையின்பத்தில் ஆழ்ந்து திளைத்து உள்ளம் பூரித்து வேத புருடனை வேதம் துதிப்பது போலத் துதிக்கின்றார். அது மூன்றும் பத்து நாலாம் திருவாய்மொழியான 'புகழுநல்லொருவனென்கோ' என்று தொடங்கும் பதிகம்.

இப்பதிகம் எம்பெருமானுடைய விபூதி யோகத்தைக் கூறுகின்றது. இது முதற்பாசுரம்:—

புகழுநல்லொருவனென்கோ!
பொருவில் சீர்ப்பூமியென்கோ!
திகழுந்தண்பரவையென்கோ!
தீயென்கோ வாயுவென்கோ!
நிகழும் ஆகாசம் என்கோ!
நீள்சுடர் இரண்டுமென்கோ!
இகழ்வில் இவ்வனைத்து மென்கோ!
கண்ணனைக் கூவுமாறே.

விபூதியென்ற சொல் செல்வம் ஐசுவரியம் அல்லது கடவுள் தன்மையென்று பொருள்படும். இப்பதிகம் எம்பெருமானுடைய பரம்பொருள் தன்மையை வருணிக்கின்றது. புகழும் நல் ஒருவன் என்கோ! எம்பெருமானை வேதங்கள் எல்லாம் ஒருமுகமாக ஒருவன் என்று புகழும் உயர் நலம் உடையவன எனச் சொல்லுகேனோ! एकं सत् विप्रा बहुधा वदन्ति என்று ரிக்வேதம் கூறுகின்றது. அதாவது ஒன்றான தெய்வத்தை அறிஞர், பல பெயரிட்டு அழைக்கிறார்கள் என்று கூறும் ஒருவனைக் கண்ணன் என்று அழைக்கின்றேன். கண்ணனே அந்த ஒருவன் என்கிறார்.

மேலும் स एक: அவன் ஒருவன் என்றும்,

एको वशी सर्वभूतान्तरात्मा
एकं रूपं बहुधा य: करोति ।
तमात्मस्थं ये नु पश्यन्ति धीरा:
तेषां शान्ति: शाश्वतं नेतरेषाम् ।।

அவன் ஒருவனே வசீ. எல்லாவற்றையும் தன் வசத்தில் கொண்டிருக்கிறான். அவன் ஸர்வபூதாந்தராத்மா — எல்லாமான சராசரங்களின் அந்தராத்மாவாக — அந்தர்யாமியாக உயிருக்கு உயிராக-the life of life — இருக்கிறான். அவன் ஏகம் ரூபம்-தன்னுடைய ஒன்றான உருவத்தை, பஹுதா யக் கரோதி — பலவாகப் செய்து கொள்ளுகிறான். அவ்வாறான பெருமானை — ஆத்மஸ்தம் — ஆன்மாவிற்குள் இருப்பவனை யே நு பச்யந்தி தீரா ; எந்த அறிவிற் சிறந்தவர்கள் பார்க்கிறார்களோ, தேஷாம் சாந்தி : சாச்வதம் — அவர்களுக்குத்தான் மனச்சாந்தி நிரந்தரமாக இருக்கும். ந இத ரேஷாம் — மற்றவர்களுக்குக் கவலையுற்ற மனநிலை. அவ்வாறு வேதங்கள் புகழும் ஒப்பற்றவன்தான் கண்ணன் என்கிறார் நம்மாழ்வார்.

பொருவில் சீர் பூமியென்கோ! நிகரற்ற செல்வங்களைத் தாங்கிக் கொண்டிருக்கும் பூமியென்று அவனை நான் சொல்லட்டுமா? यस्य पृथिवी शरीरं —எவனுக்கு இந்தப் பூமி உடலாக இருக்கின்றதோ என்றும், य: पृथिव्यां तिष्ठन् यं पृथिवी न वेद य: पृथिवीं यमयति- எவன் பூமிக்குள் இருக்கிறானோ, எவனைப் பூமி தனக்குள் இருப்பதாகஅறியவில்லையோ, எவன் பூமியை இயக்குகின்றானோ அவன் ते अन्तर्यामि अमृत: உனகருள்ளிருக்கும் அந்தர்யாமியாகிற ஆராவமுதன் என்றும் உபநிடதம் கூறுகின்ற பரம்பொருள் கண்ணன்தான் என்கிறார் ஆழ்வார்.

**यां आविश्य च भूतानि धारयामि अहं ओजसा** —நான் பூமிக்குள் சென்றிருந்து உயிர்களை என்னுடைய ஆற்றலால் தாங்கிக் கொண்டிருக்கிறேன் என்று கண்ணன் கீதையில் கூறியிருப்பது நம் நினைவுக்கு வருகின்றது.

இனி, திகழும் தண்பரவை யென்கோ! திடமான பூமி அவன் என்றால் தண்ணென்று குளிர்ந்து மிருதுவாகத் திகழும் அழகிய பெருங் கடல்களும், அவன்தான் என்கிறார். यमन्त:समुद्रे कवयो वदन्ति, எந்தப் பரம்பொருளைக் கவிகள் ஸமுத்திரத்தில் இருக்கின்றதாக வருணிக்கிறார்களோ என்று உபநிடதம் பேசுகின்றது.

இதற்கு மேலே, தீயென்கோ! வாயு வென்கோ! என்கிறார். தண்மையும் மிருதுத் தன்மையும் அவனிடம் காணலாம். எனின் அவனிடமே எரித்தன்மையும் எங்கும் பரந்திருக்கும் வாயுத்தன்மையும் காணமுடிகின்றது.

अयं अग्नि : वैश्वानरो यो यं अन्त:पुरुषे येनेदं अन्नं पच्यते - என்று வேதம் பறைசாற்றுகின்றது. அதாவது, இவன்தான் நெருப்பு, வைச்வாநரன் என்ற பெய

### குறுக்கெழுத்துப் புதிர் விடை:

**இடமிருந்து வலம்:**

| | | | |
|---|---|---|---|
| 1. | வேத வியாசர் | 17 | அத்தா |
| 6. | உத்தமம் | 19 | சிதம்பரம் |
| 7. | போஜன் | 21 | துர்க்கை |
| 8. | தோத்திரம் | 22 | மாயோன |
| 12 | திருமண் | 26 | சித்தி |
| 13. | ராமநாதன | 27. | கருணை |
| 14. | ஜன்மா | 28. | உயிர்வதை |
| 15. | தமிழ் | 29. | தம் கடன |
| 16. | திங்கள் | 30. | மல்லாண்ட திணை தோளன் |

**மேலிருந்துகீழ்:**

| | | | |
|---|---|---|---|
| 1 | வேலும மயிலும் துணை | 15. | தனுா |
| 2. | தபோவனம் | 17. | அரவணை |
| 3. | விஜயதசமி | 18. | பக்தி |
| 4. | யான | 19. | சிரத்தை |
| 5. | சரசுவதி | 20. | நமசிவாய |
| 6. | உத்திராக்ஷம | 23. | யோகம் |
| 8, | தோன்றல் | 24. | மான் |
| 9. | திருமகள் | 25. | மயில |
| 10. | ஜகன்மாதா | 26. | சிவ. |
| 11. | இல்வாழ்க்கை | | |

ருடன் பிராணிகளின் தேகத்திலிருந்து கொண்டு உணவைச் செரிக்கச் செய் கிருன்.

பகவத்கீதையில கண்ணன்,

**अहं वैश्वानरो भूत्वा प्राणिनां देहमाश्रितः।**
**प्राणापान समायुक्तः पचाम्यन्नं चतुर्विधम्।**

வைச்வாநரன் என்ற நெருப்பாக பிராணிகளினுடைய உடலுக்குள் நானிருந்து பிராண வாயுவையும், அபாந வாயுவையும் (Inhaled air-exhaled air) சமப்படுத்தி உணவை சீரணிககச் செய்கிறேன் என்று கூறுவது நம் நினைவுக்கு வருகின்றது. பூமிக்குள்ளிருக்கும் நெருப்பும்—**भूगर्भाग्नि**—Terrestrial fire அவனதான். அவ்வாறு நெருப்பாக இருப்பவன் காற்ருகவும் இருக்கிருன். **नमस्ते वायो त्वमेव प्रत्यक्षं ब्रह्मासि**—ஏ காற்றே உனக்கு வணக்கம், நீதான் கணகண்ட பிரமம் என்று தைததரீயம் கூறுகின்றது. **पवनः पवतामस्मि** — சுத்தம் செய்யும் பொருள்களுள், எங்கும் வியாபித்திருத்திருக்கும் பொருள்களுள் நான் காற்ருக இருக்கிறேன் என்கிருன் கீதையில் கண்ணன்.

மேலே செல்வோம். நிகழும் ஆகாசம் என்கோ! இடையின்றி நிரந்தரமாக வியாபிக்கும் ஆற்றலுடைய ஆகாசமென்கோ என்கிருர் ஆழ்வார். **आकाश शरीरं ब्रह्म**—ஆகாயத்தை சரீரமாக உடையது பிரமம் என்று உபநிடதம் பேசுகின்றது. Vaccum என்பதில் Ether இருககின்றது என்று விஞ்ஞானம் கூறும்.பாழ் — Empty Space—என்பதில் இருக்கும் வஸ்து ஆகாசம். ஆகாசம் என்பது எங்கும் பிரகாசிப்பது என்பது பொருள். அது உள்ளும் பிரகாசிக்கின்றது. **स एषोऽन्तर्हृदय आकाशः**—அந்தர் ஹ்ருதயத்தில் அதாவது இதயகுகையில் ஒளி வீசித் திகழும் ஆகாசமெனப்படுவது இநதப் பரம்பொருள்தான் என்று உபநிடதம் கூறுகிறது. ஆழ்வாரும் நிகழும் ஆகாசமென்கோ என்று கண்ணனை நினைக்கின்ருர்.

நீள் சுடரிரண்டுமென்கோ! உலகப் பிரசித்தமான சூரிய சந்திரர் என்று கொண்டாடுவேனே என்கிருர்.

**यदादित्यगतं तेजो जगद् भासयतेऽखिलम्।**
**यच्चन्द्रमसि यच्चाग्नौ तत्तेजो विद्धि मामकम्॥**

சூரியனிடத்தில் இருக்கும் சிறந்த ஒளி உலகத்தையெல்லாம் பிரகாசிக்கச் செய்கின்றதே அதுவும், சந்திரனிடத்தில் இருக்கும் இனிய ஒளியும் நெருப்பில் இருக்கும் பெரிய சூடும் என்னுடையதேயென்பதை அறிந்துகொள் என்று கண்ணன் அருச்சுனனுக்குக் கூறுகிருன். **आदित्यानां अहं विष्णुः**—ஆதித்யர்களுக்குள் நான் விஷ்ணுவாக இருக்கிறேன் என்றும், **पुष्णामि चौषधीः सर्वाः सोमो भूत्वा रसात्मकः**—இனிய சுவைகளை உட்கொணடிருககும் சோமனுக இருநது பயிர்களை வளர்க்கின்றேன் என்றும் கண்ணன் கூறுகிருன.

பஞ்சபூதங்களையும் அடக்கி சூரியனையும் சேர்தது பரம்பொருளின் வியாபகததை உபநிடதம மிக அழகாக வருணிக்கினறது. **येनावृतं खं च दिवं महीं च येनादित्य. तपति तेजसा भ्राजसा च**—எந்தப் பரம்பொருளால் ஆகாயமும வானமும் பூமியும் சூழப்பட்டிருக்கின்றதோ, எவனுல் சூரியன் ஒளியாலும் வெய்யிலாலும் உலகத்தை எரிக்கின்ருனே என்று பாராட்டுகின்றது. மற்ருெரு வாக்யம், **अम्भस्य पारे भुवनस्य मध्ये नाकस्य पृष्ठे महतो महीयान्**—சமுத்திரக்கரையிலும் பூமியின் மத்தியிலும் வானத்திற்கு உயரத்திலும் எந்த மிகப் பெரியது இருக்கின்றதோ அது பரம்பொருள். **येन द्यौरुग्रा पृथिवी च दृढा येन स्वः** எவனுடைய சக்தியால் ஆகாயம் எங்கும் பரவியும் பூமி திடமாகவும் இருக்கின்றனவோ அவனே பரம்பொருள். இவை போன்ற உயரிய கருத்துக்கள் கொண்ட வாகியங்கள் நம் நினைவுககு வருகின்றன.

இவ்வாறு பஞ்சபூதங்களும் சூரிய சந்திரரும் கண்ணன என்பதை அறிந்து உணர்த்தி மொத்தமாக இகழ்வில் இவ்வனைத்துமென்கோ! என்று ஆனந்தம அடைகிருா. **सर्वं खल्विदं ब्रह्म**—இங்குள்ளதெலலாம் நிச்சயமாகப் பிரமம் என்று உபநிடதம் சொல்லுகிறது. **अन्तर्बहिश्च तत् सर्वं व्याप्य नारायणः स्थितः** இநதப் பிரபஞ்சம முழுவதும் உள்ளும் புறமும் நாராயணன் வியாபித்திருககிருன என்றும ரிக்வேதம் பறைசாற்றுகின்றது.

ஆகவே வேதம் தமிழ் செய்த மாறன் அருளிச் செய்திருககும் இப்பதிகத்தில் ஒவ்வொரு பாசுரமும் வேதோபநிடதவாக்கியங்களை நினைவுக்குக் கொண்டு வரும் பாங்கில் அமைந்திருக்கின்றது. ★

# ★ கடிகாசலம் ★



ஸ்ரீ மஹா விஷ்ணு துஷ்டர்களைச் சிக்ஷித்துப் பக்தர்களைக் காப்பாற்றப் பத்து அவதாரங்கள் எடுத்தார். அதில் தனிப்பெருமையும், சக்தியும் வாய்ந்தது ஸ்ரீ நரசிம்ம அவதாரம் ஆகும். இந்த அவதாரம், பக்தி செய்த குழந்தை பிரகலாதனுக்குக் கட்டுப்பட்டு எடுத்த அவதாரம் ஆன தால் இந்த அவதாரத்தில் பக்தர்களுக்கும் அருள் பாலிப்பதிலும சுலபர் என்றால் மிகையாகாது. இவ்வாறு அவதரித்த இடங்களில் கடிகாசலம் (சோளிங்கர்) என்ற க்ஷேத்திரம் மிகவும் பிரசித்தி பெற்றதும், முக்கியமானதும் ஆகும். இந்த க்ஷேத்திரத்தை ஆழ்வார்கள் இவ்வாறு பாடி இருக்கிறார்கள்.

" பண்டெல்லாம் வேங்கடம்
பாற் கடல் வைகுந்தம்
கொண்டங் குறைவார்க்கு
கோயில் போல் - வண்டு
வளங்கிளரும் நீர் சோலை
வண்பூங் கடிகை "

இந்த க்ஷேத்திரத்தில் சப்தரிஷிகள் தவம் செய்துகொண்டு இருந்தார்கள் என்பதும் அவர்களின் வேண்டுகோளுக்கு இணங்க கருணை மயமான யோக நரசிம்மராக காட்சி அளித்து அருள் பாலித்தார் என்பதும் வரலாறு. இவருக்கு "அக்காரகனி" என்னும் திருநாமம் உண்டு. இதையே,

" மிக்கானை மறையாய் விரிந்த விளக்கை
என்னுள்
புக்கானை புகழ்சேர் பொலிகின்ற
பொன்மலையைத்
தக்கானைக் கடிகை தடங்குன்றின்
மிசையிருந்து
அக்கார கனியை அமைந்துய்ந்து
போனேனே "

என்று திருமங்கை ஆழ்வார் மங்களா சாசனம் செய்து இருக்கிறார். மேலும் பேயாழ்வார், நம்மாழ்வார் ஸ்ரீ மணவாள மாமுனிகள் மங்களா சாஸனம் செய்து இருக்கும் புண்ய ஸ்தலம் இது. இஃது 108 திருப்பதிகளில் சேர்ந்தது என்பது மிகவும் குறிப்பிடத்தக்கதாகும்.


திரு. எஸ். லக்ஷ்மி நரசிம்மன்
விஜயவாடா.


இஃது தமிழகத்தில் வட ஆற்காடு மாவட்டத்தில் அரக்கோணத்தில் இருந்து மேற்கே சுமார் இருபத்தைந்து கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. இதற்கு முற்காலத்தில் "சோழிங்கபுரம்" என்று பெயர். நரசிங்கபிரான் தோன்றியதால் "சோழசிம்ம புரம்" என்றும் வழங்கப்பட்டு தற்போது "சோளிங்கர்" என மருவி பெயர் பெற்றுள்ளது.

இத்திருத்தலத்தில் இரண்டு மலைகள் உள்ளன. ஒன்று பெரிய மலை, மற்றொன்று சின்னமலை. மலையடிவாரப்பகுதி "கொண்ட பாளையம்" என்று அழைக்கிறார்கள்.

பெரியமலையில் ஸ்ரீ யோக நரசிம்மரும், ஸ்ரீ அமிருதவல்லித் தாயாரும் எழுந்தருளி சேவை சாதிக்கிறார்கள். தாயாருக்கு சுதாவல்லி என்று திருநாமமும் உண்டு. மேலும் ஸ்ரீ யோக நரசிம்மர் சந்நதியில் ஸ்ரீ லக்ஷ்மி நரசிம்மர், சக்ரத்தாழ்வார், கண்ணன், கருடன் ஆகியவர்கள் சேவை சாதிக்கிறார்கள்.

சின்னமலையில் ஸ்ரீ யோகாஞ்சனேயர், ஸ்ரீ ராமர், ஸ்ரீ அரங்கநாதர் எழுந்தருளி சேவை சாதிக்கிறார்கள்.

இங்கு வரும் பக்தர்கள் பெரிய மலைக்கும், சின்னமலைக்கு நடந்தும் டோலி மூலமும் செல்கிறார்கள்.

இங்கு எழுந்தருளி இருக்கும் பெருமாள் மிகவும் வரப்பிரசாதி என்பது தொன்று தொட்டுக் கொண்டாடப்படுகிறதாகும். சற்றுக் கஷ்டப்பட்டு அவரை வந்து சேவிக்கும் பக்தர்களுக்கு வேண்டிய வரங்களை அள்ளிக் கொடுக்கும் அருள் உள்ளவர். மேலும் குழந்தைப் பேறு இல்லாவவர்கள், புத்திஸ்வாதீனம் இல்லாதவர்கள், ஏவல், பில்லி, சூன்யம் இவற்றால் பாதிக்கப்பட்டவர்கள் என்று எந்த துன்பத்திலும் சரி, இங்கு வந்து சத்திரங்களில் தங்கி ஒரு மண்டலம் (48 நாட்கள்) விரதத்துடன் ஸ்ரீ யோக நரசிம்மரையும் ஸ்ரீ யோகாஞ்சநேய

ரையும் சேவை செய்தால் அதறகு கைமேற் பலன் உடன் கிட்டும் என் பது கண்கூடான உண்மை.

ஸ்ரீ யோக நரசிம்மருக்கும், ஸ்ரீ அமிருதவல்லித் தாயாருககும் பிரதி வெள்ளிக்கிழமையும், ஸ்ரீ யோகாஞ் சனேயருக்குப் பிரதி ஞாயிறும் திருமஞ்சனம மிகவும் விசேஷமாக நடைபெறுகிறது. மேலும் இங்கு எங்கும காணுத பஞ்சாமிருத அபி ஷேகம் (பால், வாழைப்பழம், தேன், தயிர், நெய்) காண ஆயிரம் கண் வேணும். இந்த திருமஞ்சனம் செய்த பஞ்சாமிருதத்தை உண்டால் சகல ரோகங்களும் குணம் அடைந்து வருகிறது என்பது பக்தர்களின் ஆணித்தரமான நம்பிக்கை.

இங்குத் தக்கான்குளம, நரசிம்ம தீர்த்தம், பாணடவ தீர்த்தம ஆகிய வைகள் மிகவும் புண்ணியமான தீர்த் கள். பக்தர்கள் மலை ஏறுவதற்கு முன் தக்கான் குளத்தில் ஸ்நானம் செய்து அவரவர்கள் ஆசாரப்படி பெருமாளை சேவிக்கச் செல்வது வழக் கம்.

இங்கு உத்ஸவ மூர்த்தி 'சோளிங் கரில்' அதாவது மலையடிவாரத்தில் இருந்து சுமாா 3 கிலோ மீட்டர் உள்ள கோயிலில் எழுந்தருளியிருக் கிறுர். இவருக்கு "பக்தோசிக" பெரு மாள எனவும் பெயர் உணடு. இவ ருக்கு மாத உற்சவங்கள், பவித் ரோஸ்வம், இராபத்து, பகல்பத்து, பிரம்மோத்ஸவம் மற்றும் நரசிம்ம ஜயநதி மிகவும் விமரிசையாக நடந்து வருகின்றன.

இங்கு இரண்டு மலைகளிலும் காாத் திகை மாதத்தில் திரளாக பக்தர்கள வந்து சேவிததுச் செல்வது பணடைக் காலத்தில் இருந்து நடந்து வரும் பணபாடு.

இந்த க்ஷேத்திரத்தில் ஸ்ரீ யோக ஆஞ்சநேயர் சங்கு, சக்கரம, ஜப மாலையுடன் சேவை சாதிப்பது வேறு எங்கும் காணுததாகும. இவருக்குப் பெருமாள துஷ்டர்களைச் சிக்ஷிககவும் பக்தர்களை ரக்ஷிக்கவும், மேலும் அருள் புரியவும் வேண்டி இந்த ஆயுதங்களை அளித்துள்ளார் என வரலாறு கூறு கிறது.

இஙகுப் பெரிய மலையில் பெருமாளை யும் தாயாரையுமசேவித்து விட்டுச் சினனமலையிலும் சென்று ஸ்ரீ யோக ஆஞ்சனேயரையும் சேவித்து வநதால தான் பூர்ணபலன் கிடைக்கும் என் பது இந்த க்ஷேத்திரத்தின் மகிமை யாகும். அவவாறே பக்தர்கள இன் றும் கடைப் பிடித்து வருகிறுாகள.

" வேதைக வேத்யம் புருஷம மகாந்தம்
ஆதித்யவாணம் தமஸப் பரஸ்தாத
கடிகாசலததிதம் ஸ்ரியாணு ஸிததம
சரணம பரபதயே"—என்றும

" கடிகாசல வாஸாய காமிதார்த
பிரதாயினே
சுதாவலலிசமேதாய ஸ்ரீ நிருசிமமாய
மங்களம

—எனவும் அவரைப் போற்றி, தொழுது வந்தால் சகல கஷ்டங்களும் பிணிகளும் நீங்கும் என்பது கண் கணட சிநதாந்தம் ஆகும் என்றுல் மிகையாகாது.

இந்த புராண வரலாறுமிக்க, ஆழ் வார்கள, ஆசாரியர்கள, மங்களா சாஸனம் செய்துள்ள திவ்ய தேசத்தை, பக்த சிரோன்மணிகள் சேவித்து இம்மைக்கும் மறுமைக்கும் அவன் அருள் பெற்று சிறப்புற வாழ வேண்டுகிறேன். ★



ஸ்ரீ புவனேஸ்வரி (புதுக் கோட்டை)
திரு. எஸ். ஜி. சேஷகிரி — கோவை.]

# குலசேகரப் பெருமாள் காட்டும் திருவேங்கடம்

டாக்டர் N. சுப்புரெட்டியார்
சென்னை

குலசேகராழ்வார் கேரள மாநிலத்தில் கோழிக்கோடு பகுதியை ஆண்டு வந்த அரசர். திருவஞ்சிக்களத்தில் கௌஸ்துபாம்சமாய் அவதரித்தவர். இவர் சோழ பாண்டியர்களை வென்று தமிழ்நாடு மூன்றுக்கும் தலைமை பூண்ட செய்தி "கொல்லி காவலன் கூடல் நாயகன் கோழிக்கோன் குலசேகரன்" (பெரு. திரு. 2:10) என்ற விருதினால் அறியக் கிடக்கின்றது. எம்பெருமான் திருவருள் நோக்கத்தால் திருமாலே சிறந்த தெய்வம் என்று உணர்ந்தவர். அவனுக்கு அடிமையானவர். எம்பெருமானுடைய அநந்த கல்யாண குணக்கடலில் ஆழங்கால்பட்டு நெஞ்சுருகி ஈடுபட்ட இவர் திருமாலின் விபவாவதாரங்களில் இராமகிருஷ்ணாவதாரங்களினிடத்திலும், அர்ச்சாவதாரத்தில திருவரங்கம், திருவேங்கடம், திருவித்துவக்கோடு போன்ற திவ்விய தேசத்து எம்பெருமான்களிடத்திலும் பெருங்காதல் கொண்டவர். இராமாயணக் காலட்சேபத்தையே எப்போதும் பொழுது போக்காகக் கொண்டவர். பாகவதர்களைச் சிறப்பாக உபசரிப்பவர். தமது திருமாளிகைத் திருவாராதனத்தில் எழுந்தருளியுள்ள இராமபிரானுக்கும் இராஜ கோபாலனுக்கும் நித்திய நைமித்திக உற்சவங்களைக் குறையறச் செய்து கொண்டிருந்தவர். இவர்,

> தில்லைநகர் திருச்சித்ர கூடந் தன்னுள்
> அரசு அமர்ந்தான் அடிசூடும்
> அரசை அல்லால்
> அரசாக எண்ணேன்மற்(று) அரசு
> தானே.
> (பெரு. திரு. 10:7)

என்று கோவிந்தராஜனின் திருவடிகளைத் தலைமேல் சூடுதலையே மகுடாபிஷேகமாகப் பாவிப்பவர்; பெருமாளுடைய (இராமபிரானுடைய) இன்ப துன்பங்களைத் தமது சுக துக்கங்களாகக் கருதியதனால இவருக்குப் 'பெருமாள்' என்ற பெயரும் வழங்கலாயிற்று.

இவர் மனம் அடிக்கடி கோயில் வாசத்தையே நாடியது. இவர் தம் தலைநகரைவிட்டு திருஅரங்கத்துக்குச் சென்று பெரிய பெருமாளைச் சேவிப்பாராயின் பின்பு தலைநகருக்கு மீளுதல் அரிதென்றும் திருவரங்கத்திலேயே நிரந்தரமாகத் தங்கிவிடுவரென்றும் கருதி அந்தப் பயணத்தைத் தடுக்க ஓர் உபாயத்தை மேற்கொண்டனர் அமைச்சர்கள். இவர் பாகவதர்களை உபசரிப்பதில் விருப்பமுள்ளவராதலால், பல பாகவதர்களை வரவழைத்து இவர் திருமுன்பு அனுப்பலாயினர். திருமாலடியார்களைப் பூசித்த பேறு அறுபதினாயிரம் ஆண்டுக்காலம் திருமாலை ஆராதனம் செய்த பயனுக்கு மேற்பட்டது என்ற சாத்திர உண்மையை அறிந்தவராதலால் திருவரங்கத் திருத்தலப் பயணத்தை நிறுத்தி அடியார்களை உபசரிப்பதில் ஈடுபடலாயினர். அமைச்சர்கள் அடிக்கடி இம்முறையை மேற்கொண்டதால் இவர் ஆட்சிக்குட்பட்ட நாடெங்கும் வைணவ அடியார்களின் கூட்டம் பெருகலாயிற்று.

அடியார்களின் கூட்டம் பெருகியும் அவர்கள் செல்வாக்கு வளர்ந்தும் வருவதைக் கண்ட அமைச்சர்கள் பொறாமை கொண்டனர். அவர்கள் அந்தரங்கமான இடத்திலும் எக்காலத்திலும் சிறிதும் தடையின்றி நடமாடுவதையும் அரசனிடம் வரம்பு கடந்த சுதந்திரத்துடன் பழகுவதையும் அமைச்சர்கள் காணும்போது இப்பொறாமை மேலும் வளர்வதாயிற்று. அவர்கள் அடியார்களிடம் அரசனுக்கு வெறுப்பை உண்டாக்கக் கருதினர். ஒரு சமயம் அரண்மனையில் இராம நவமிப் பெருவிழா நடைபெற்றபோது, இராமமூர்த்திக்கும் அர்ச்சாவதாரமுள்ள மற்ற எம்பெருமான்கட்கும் திருமஞ்சனம் செய்தற்பொருட்டு திவ்வியாபரணங்களையெல்லாம் களைந்து வைத்தனர். எல்லோரும் சுவாமி சேவையில் கருத்தூன்றி நிற்கும்போது அமைச்சர்கள் திருவாபரணத்திரளிலிருந்து ஒரு நவரத்தினமாலையை எடுத்து ஒளித்து வைத்தனர். பின்பு அர்ச்சகர் பெருமாளுக்கு அலங்காரம் செய்யும் பொழுது அந்த முக்கிய அணிகலத்தைக் காணாமல் கவலைப்பட்டுச் செய்தியை அரசனுக்கு அறிவித்தனர். அரசன் மனங்கலங்கி கள்வனைத் தேடிப் பிடிக்குமாறு அமைச்சர்கட்குக் கட்டளையிட்டனர். அமைச்சர்கள் பாகவதர்களே எங்கும் சுதந்திரமாகத் திரிவதால் அவர்கள்தாம் இதனைக்களவு செய்திருத்தல் வேண்டும் என்று அவர்கள்மீது அடாதபழி சுமத்தினர்.

அரசனால் அப்பழி தாங்க முடியவில்லை. அடியார்களின் நற்குண நற்செயல்களை நன்கு அறிந்த மன்னர்க்கு அவர்கள்மீது சங்கை கொள்வதற்கு மனம் ஒப்பவில்லை. உடனே அவர் பழி சுமத்தின அமைச்சர்களைக் கடிந்து "வைணவ சிகாமணிகள் இத்தகாத செயலை மனத்தினாலும் கருதார்; இது திண்ணம்; இதனை உறுதிப்படுத்துவதற்கு யானே பிரமாணம் காட்டுவேன்" என்று கூறி கொடிய நாகம் ஒன்றினைக் கொண்ட குடம் ஒன்றினைச் சுவையின்முன் தருவித்து, "வைணவ அடியார்கள் மனம் மொழி மெய்களால் தூய்மையுடையராயின் இந்நாகம் என்னை ஒன்றும் செய்யாது;

இல்லையாயின, இஃது இப்பொழுதே என்னைத் தீண்டிக் கொல்லட்டும்" என்று சூளுரைத்து அக்குடத்தினுள் கையிட்டனர். நாகம வாளா இருந்தது; இந்நிகழ்ச்சியை,

ஆரம் கெடப்பான அனபர்கொள
ளார்என்று அவாகட்கே
வாரம கொடுகுடப் பாம்பிறகே
இட்டவன மாற்றலரை
வீரம கெடுத்தசெங் கோற்கொலலி
காவலன, வில்லவர்கோன்
சேரன் குலசே கரனமுடி
வேந்தர் சிகாமணியே.

(பெருமாள் திருமொழி தனியன)

என்ற மணக்கால் நம்பி அருளிய தனியனுல் அறியலாம. தம் சூழ்ச்சி பலியாததைக் கண்ட அமைச்சர்கள் பேரச்சம் கொண்டனர்; தம் பிழையைப் பொறுத்தருளுமாறு அரசனைச் சரண் அடைநதனர். அரசனும் அதனைப பொறுத்து அதற்குக்கழுவாயாக பாகவதர்கட்கு எப்பொழுதும் பணிவிடை செய்யுமாறு கட்டளையிட்டான். பாகவத அபசாரம் மிகக் கொடுமையானது. 'ஈசுவரன அவதரித்துப் பண்ணின ஆனைத தொழில்கள் (மனிதர் செயலகட்கு அப்பாற்பட்ட செயலகள) எலலாம் பாகவத அபசாரம் பொறுமை'யன்றே? (ஸ்ரீவச. பூஷ. நூறபா. 196.)

ஆழ்வார் திருவேஙகடததின்மீது கொணட காதல்:

இககழி பெருஙகாதலை அவா அருளியுள்ள ஒரு திருமொழியில கணடு அனுபவிக்கலாம! திருவேஙகடமலையில் பிறத்தலும் அங்கு ஏதாவது ஒரு பொருளாக இருததலும போதும எனக கூறுகினறார்.

நாளுக்கு நாள் வளர்ந்து கொழுக்கும மனித உடம்பெடுததுப் பிறத்தலை விரும்பாத ஆழ்வார் கோனேரி வாழும் குருகாய்ப் பிறப்பதற்கு விருமபுகின்றார். இப்படிப் பிறந்தால் அது விரஜா நதியைச சேர்ந்து வைகுநதத்தில் பிறந்து வாழ்வதோடு ஒககும் என்று கருதினர் என்பது போதரும். இதனுல் ஒழிவில் காலம் எல்லாம் உடனாய் மன்னி திருவேங்கடத்தானுக்கு ஏதாவது ஒரு வகையில் வழுவிலா அடிமை செய்ய வாய்ப்பாகும் என்று சிநதித்தார் போலும. இப்படிக கூறியவரின் சிநதனை மேலும் சிறகடிததுப் பறககினறது. குருகிற்கு சிறகுகள் இருப்பது அவர் நினைவிற்கு வருகின்றது. இதனுல் அஃது இவற்றின துணைகொணடு திருமலையை துறநது வேறிடததிறகுச சென்றாலும செலலககூடும என்று கருதுகின்றார். அங்ஙனமின்றி அநத மலையிலேயே பிறத்தல், வாழ்தல், இறத்தல் ஆகிய செயல்களையுடைய மீனாய்ப் பிறந்தாலும் போதுமே என்று எணணுகின்றார்.

தேனார் பூஞ்சோலை
திருவேங் கடச்சுனையில்
மீனாயப பிறககும்
விதியுடையேன ஆவேனே.

(பெரு. திரு. 4:2)

என்பனுல் தன அவாவினை வெளியிடுகினறார்.

மேலே மீனாய்ப் பிறந்தாலும் போதும் என்று எணணியவர், மீன நீர் நிலையைப் பற்றிய உயிர் தரிக்க வேணடி வரும். அப்படிப் பிறப்பதை விட எம்பெருமானுக்கு அந்தரங்கச சேவகனாகத் தொணடு புரியும வாய்ப்புக கிடைக்கப் பெற்றால தான் யாதொரு தடையுமினறி அர்ச்சக பரிசாரர்களுடன் எளிதில் திருக கோயிலில் புக்குக் கருவறையை அடைந்து எமபெருமான அருகில் நினறு பணிபுரியலாம் என்ற எண்ணம பளிசசென்று இவர் மனத்தில் உதிககின்றது. அடியார்களின பெருங கூட்டத்தில் ஒருவனாக இருந்தாலும அவர்கள நடுவில் சிக்கி நெக்குண்டு உளளே புக முடியாமல தடுமாறும நிலை ஏறபட்டாலும ஏற்படககூடும். இஙஙனமினறி அப்பெருமானுக்கு அணுககத் தொண்டனாய அவன் வாய்நீர் உமிழும் பொறகளாஞ்சியை ஏந்திக் கொணடு செல்லும் வாயப்பு இருந்தால் எளிதில உள்ளே சென்று விடலாம் என்று கருதுகின்றார்.

மினவடடச் சுடராழி
வேங்கடக்கோன தானஉமிழும

## அம்பத்தூர்

சிவபெருமானின சிந்தை அறியாது அன்னை தாட்சாயணி தன் தந்தை நடத்தும வேள்வியைக் காண ஆவலுடன் புறப்பட்டுச சென்று அங்கு தந்தையால் அலட்சியப்படுததப்பட்டு அகம் நொநது தன் உடலை உதறி விட துணிந்து ஓடோடிச் சென்று ஓம குணடலத்தில் பாய்ந்து உயிரைத் துறநதாள. பரமசிவன் அப்போது அங்கு பயங்கரச் சினததுடன் தோனறி தேவியின் உடலைத் தோளில சுமநது உக்கிர தாணடவம் ஆடத் தொடங்கினான். சிவனின சீற்றம் சப்த லோகங்களையும் சுட்டது. உடனே மாதவன் நெருக்கடி நிலையை நன்கு உணர்ந்து தன் சகராயுதத்தை தேவியின மீது தாமதம இலலாமல் ஏவினான். தேவியின் உடல் பல துணடுகளாய் சிதைநது பாரத நாடெங்கும் — இமயம் முதல குமரி வரை — பரவி விழுநதன. அவைகளே சக்தி பீடஙகளாயின. சென்னையில் உள்ள வைணவி ஆலயம் இதத கைய சக்தி பீடங்களில் ஒனறாகும். அவவரிசையில் இது 51 ஆவது பீடம். எனவே இது ஐமபதது ஓர் ஊர் என பெயர் கொணடது இப் பெயரே இன்று அம்பத்தூர் ஆயிற்று.

திருககோவலூர் — திரு. ஆா. சுபபராவ்.

பொன்வட்டில் பிடித்துடனே
புகப் பெறுவேன் ஆவேனே.
(பெரு. திரு. 4:3)

என்று தன் விருப்பத்த வெளியிடு கின்ருர்.

தான் விரும்பும் அந்தரங்கப்பணி கிடைத்தால் பொன் வட்டில் மேல் மனம் சென்று அதனைக் களவாடும ஆசை தோனறலாம்; அதனுல் சிறை வாசமும் கிட்டலாம் என்ற எணண வோட்டம எழுகினறது ஆழவாருக்கு. ஆதலால் இயங்கு திணைப் பிறப்பு வேண்டும் என்பதில்லை; நிலைத்திணைப் பிறப்பு கிடைத்தாலும போதும் என்று எண்ணுகின்றது இவர் மனம். வானவர் கோனுடன் பூமாரி பொழி யும் இடமாதலால் அத்திருமலையில் மலர்ப்பணியாற்றும் மரமாகவேனும் இருக்கலாமே என்று கருதுகின்ருர். "தேனின் இனிய பிரானே செணபகச சூட்டவாராய்" (பெரியாழ். திரு. 27: 1) என்ற பெரியாழ்வார் வாக்கால் எம்பெருமான் திருவுள்ளத் திறகுச் சன்பக மலர் மிகவும் உகப்பாதலை அறிகின்ருர். உடனே,

பணபகரும் வண்டினஙகள்
பண்பாடும வேங்கடத்துச்
செண்பகமாய் நிற்கும்
திருவுடையேன் ஆவேனே.
(பெரு. திரு. 4:4)

என்று தன ஆசையை வெளியிடு கின்ருர்.

இந்த ஆசைக்கும் தடை தோனறுகின்றது. திருமலைக்கு வருகின்ற செல்வர்களுள் யாரே னும் ஒருவா சணபக மரத்தை யும பெயர்த்துக கொணடேகின திரு மலையின வாழ்க்கையை இழக்க நேரிடுமே எனற ஊகம் கால் கொளளுகின்றது இவர் சிந்தனையில். ஒன்றுக்கும் உதவாத புல்பூணடு செடி கொடியின் புதராக — தம்பக மாக — வேனும் இருந்தால் தனக்கு யாதொரு தீங்கும் நேரிடாது எனறு எண்ணி,

எம்பெருமான் ஈசன
எழில்வேங் கடமலையில
தம்பகமாய் நிற்கும்
தவமுடையேன் ஆவேனே.
(பெரு. திரு. 4:5)

என்று தன் விருப்பத்தைப் புலப் படுத்துகின்ருர்.

சிறிது சிந்தித்த அளவில் இதற்கும் ஓர் ஆபத்து உணடு என்பதாக எண்ணுகின்றது இவர் தம் திருவுள் ளம். காட்டுத் துறையினர் செடி கொடிகளை அடிக்கடிச் சோதிக்கும் இயல்புடையவராதலால், அவர்கள் தம்பகத்தைக் களைந்தெறிந்து தீங் கிடக் கூடும் என்ற எணணம் முகிழ்க் கின்றது இவர் திருவுள்ளத்தில். மலை யின் ஒரு பகுதியாக இருப்பின் என் றும் மாருத ஒரே நிலையில் இருக்க லாமே என்ற எண்ணம் ஓடுகின்றது உடனே,

'தென்ன'என வண்டினஙகள்
பண்பாடும் வேஙகடததுள்
அன்னனைய பொறகுவடாம்
அருநதவத்தன் ஆவேனே.
(பெரு. திரு. 4:6)

(தென்ன-தெனதென; அன்னனைய- அப்படிப்பட்ட) என்று பொன் மய

## எது யக்ஞம்?

யச்ஞம என்பது அழகும் சக்தியும நிறைநத ஒரு சொலலாகும. யக்ஞம் என்பதற்கு நேர் பொருள வழிபாடு எனபதே. அதாவது தியாகம் என்பதுதான. எவ்விதத் தியாகமுமு, எவ்விதத் தொண்டும் யகஞம்தான. யக்ஞத்திருல் அதாவது யாகத்திஞல் மனித வாக்கமே வாழ்கின்றது.

ஹோமத் தீயில் நெயயையும் மற்றப் பொருள்களையும் கொட்டு வதைக் காட்டிலும் யகஞததிற்கு ஆழ்ந்த அர்த்தம் உண்டென்று உங்க ளுககுக் கூற விரும்புகிறேன். மானிட வர்க்கத்திறகாக எல்லாவற்றை யும தியாகம் செய்வதே யக்ஞம் ஆகும். என்னைப் பொறுத்தவரையில் இந்த ஆஹுதிகளுக்கு குறிப்பான அாத்தம் உண்டு. தூய்மைப்படுத் தும் அக்னியில நமது பலவீனங்களையும்,வெறிக் குணங்களையும், குறுகிய புத்தியையும எரித்து நாம் நம்மைச் சுத்தம் செய்து கொள்ள வேண் டியவர்களாயிருக்கிருேம. அப்போதுதான்—அப்போது மாத்திரமே நம் பிரார்த்தனைககு இறைவன் செவி சாய்ப்பார்.

சாஸ்திரங்களில் விவரங்களாக்கிய எல்லா யக்ஞங்களையும் மீண்டும் உயிர்ப்பிக்க முடியாது; உயிாப்பிக்கவும் வேண்டாம். அப்பெயரில் நடக் கும் சில சடங்குகள் நியாயமானவை என்று நிரூபிக்க முடியாது. இன்று அச்சடங்குகளில் சிலவற்றிற்குக் கூறப்படும் பொருள் வேத காலத்தில் எப்போதாவது கூறப்பட்டதா என்பது எனக்குச் சந்தேக மாகவே உளளது. அவற்றில் சில பகுத்தறிவு அலலது தர்மம் எனும் சோதனைக்கு முன் நிற்க முடியாது. இடம், காலம் எவையாலும் பாதிக்கப்படாமல் இருக்கும் சமயத்தின் கொள்கைகள் என்றென்றும் நிலைத்திருப்பவை. ஆனுல் அவற்றை அடிப்படையாகக் கொண்ட வழக்கங்கள், இடம், காலம் இவற்றிற்குகந்தவாறு மாறுகின்றன.

— மகாதமா காந்தியடிகள்.

அனுப்பியவர் — தேனி எம். சுப்பிரமணி.

மான சிகரமாகும் நசையினை வெளி யிடுகின்றார்.

சிறிது நேரததில் இநதப்பாரிப்பும் மறையத் தொடங்குகினறது. புதிய திருககோயில்களை நிறுவுவோா, பழைய கோயிலுக்குத் திருப்பணி புரிவோர், மலைமுகடடுப் பாறைகளை உடைத்துக் கொணடு போவாராத லால் அதுவும தனக்கு ஏறறதன்று என எண்ணுகினறார் ஆழ்வார். ஆத லால் எவராலும் பெயர்த்துக் கொண்டு போக முடியாத கானாக வேனும் பெருகும் பேறு கிடைக்கக் கூடாதா என்று எணணுகின்றது இவர் மனம். உடனே,

தேனார் பூஞ்சோலைத
திருவேங் கடமலைமேல
நெறியாய்க் கிடககும்
நிலையுடையேன் ஆவேனே.
(பெரு. திரு. 4:7)

என்று தன் அத்யவசாயத்தை வெளி யிடுகின்றார்.

இக்கருத்தைச் சிறிது சிந்தித்ததும் இதிலும் ஒரு குறையிருப்பதை உணர் கின்றார். ஆற்றில் எப்பொழுதும் நீரோட்டம் இருக்காதன்றோ? அப் பொழுது திருமலையிலும வாழக்கை இழந்ததாகவனறோ முடியும? அங் ஙனமினறி எப்பொழுதும் ஒருதன் மையாகத் திருவேங்கடமுடையானைச் சேவிக்கவரும அடியார்களின் அடிப் பொடி படும்படி வழியாய்க் கிடக் கும் நிலைமை தனககு வாய்த்தால் நன்றாக இருக்குமே எனறு நினைக கினறது இவரது தூயமையான உள்ளம. உடனே,

வெறியார் தணடோலைத்
திருவேங கடமேல்
நெறியாயக கிடககும்
நிலையுடையேன் ஆவேனே.
(பெரு. திரு. 4:8)

[வெறிஆர் - மணம்மிக்க; நெறி- வழி] எனறு தன் அவாவினைப் புலப் படுத்துகின்றார் ஆழ்வார்.

இதனைச் சிறிது ஆராய்நததவுடன் இதிலும ஒரு குறை தட்டுப்படுகின் றது. வழி எனபது அவரவர் வசதிக் குத் தக்கபடி மாறுபடுவதன்றோ? ஓரிடததிறகு ஒனறுதான வழியாக இருககமுடியும என்று சொல்ல முடி யாது. அன்றியும் அது விலகி நிற் கும் பானமையது. இப்போதுள்ளது போல பேருந்து வசதிகள இருககும போது எல்லோரும நடந்து தான வருவர் எனறு சொல்ல முடியுமா? இவற்றையெல்லாம் எண்ணிய ஆழ் வார் நெறியாக அமைய வேணடும் எனறு விரும்புவதைவிட எம்பெரு மானது திருவருள் நோக்கம் பதியு மாறு அவன் கண வட்டத்தில் மெய் யடியாரும பிறரும வேறுபாடின்றி எல்லோரும் இடைவிடாது நட மாடும்படியான ஓர் அசேதநப் பொரு ளாகி, அதில் அவனது திருப்பவளத் தைக காணும்படியான அறிவையும பெற வேணடும் என்று தன சிறப் பான விருப்பத்தை விணணப்பிக் கின்றார்.

நெடியானே வேஙகடவா
நின்கோயி லின்வாசல்
அடியாரும் வானவரும
அரம்பையடும் கிடந்தியங்கும்
படியாயக கிடநதுஉடன
பவளவாய் காணபேனே.
(பெரு திரு. 4:9)

எனபது அவர்தம் விணணப்பம். இப பாசுரததை அடியொற்றியே திரு மால் திருககோயில்களின கருவறை யின வாயிற்படி 'குலசேகரனபடி' எனறு இவர் பெயரையிட்டு வழங கும் சமபிரதாயமும் இருநது வரு கினறது.

இந்தப் பேற்றுக்கும குந்தகம விளையினும விளையலாம் எனறு எணணுகினறா ஆழ்வா. திருமலைககு வரும பக்தர்களுள் செல்வராக இருக் கும எவரேனும ஒருவா சநநிதிகக்ள் கருங்கல் படியிருப்பது திருவேங்கட முடையானது செல்வ நிலைக்குத் தகாது எனறும், தங்கவாசலுக்கு உடபுறமுள்ள வாயில் கருங்கல்லாக இருப்பது சிறிதும கூடாது என்றும கருதித் தங்கத் தகட்டால் மூடுவதற கும் முன்வரலாமனறோ? அப்படிச செய்தால் திருவேங்கட அப்பனின திருமுக மணடலச் சேவையை இழக்க நேரிடுமே. ஆகையால் படியாய்க கிடப்பதும் பாங்கன்று எனறு அறுதி யிடுகின்றார். பின்னர் எநதப் பிற வியை வேணடுவது என்பது தோன்ற வில்லை. அவன்தாள வணங்க அவன அருளின்றி முடியுமா? முடியா தனறோ? இநத ஞானம் தம் உள்ளத் தில் தோன்றவே தாமாக ஒரு பிறவி யையும் வேண்டிக் கொளள விரும பாதவராய்,

எம்பெருமான
பொன் மலைமேல்
ஏதேனும ஆவேனே.
(பெரு. திரு. 4:10)

என்று சொல்லித் தம் ஆசைக்குத் தலைக்கட்டி விடுகின்றார்.

இந்தப் பெருமாள் திருமொழியை அடியொற்றியே முத்தமிழ்க் கவி வீரராகவ முதலியார்,

மாடாக நிழற்றுச்செழு
மரகதத தவசிறிய
பூடாகக குழைநதநறும்
புதலாக வழிபடுவோர்
ஓடாகப் பெறுவமெனில
உயிகாணற கதிபெறலாம்
வீடாகத் திருநெடுமால
வீறறிருககும் வேஙகடத்தே.
(திருவேங், கலம். 72)

என்ற பாடலை அருமையாக அமைதது ஆழ்வாரிடம தமக்குரிய ஈடுபாட் டைப புலப்படுததுகினறார்.

*

# வால்மீகி திருவுள்ள விளக்கு

ஸ்ரீ காஞ்சீ காதி அனந்தாசார்யஸ்வாமி அருளிய வால்மீகி பாவ தீபத்தின் மொழிபெயர்ப்பு

ச்லோகம் 3:

தேவேப்யோऽபீதிதாநாத் வரவித ரணதஸ ஸர்வலோகைர் நுதத்வாத், ஸர்வாநதர்யாமிபாவா தநிதரஸுலபாச் சாபி நாராயணத்வாத் | தேவேசத்வாவ் யத்வ த்ருஹிண ஹர சுநாஸீர முக்யாம ரௌக ப்ரதயக்ஷாநதர்த்திபிச் சாப்யச கதத பரம் ப்ரஹ்ம விஷ்ணும முநீந்த்ர: ||

பதவுரை:

தேவேப்ய:=தேவர்களுக்கு, அபீதி தாநாத்=அபயமளித்ததனுலும், வர விதரணத:=வரம் கொடுத்ததனு லும், ஸர்வலோகை: நுதத்வாத்= எல்லா ஜநங்களாலும் துதிக்கப்பட்ட தனுலும், ஸர்வ அந்தாயாமிபாவாத் =எல்லாப் பொருள்களேயும் உட் புகுந்து நியமிப்பதனுலும், அநிதர ஸுலபாத்=பிறருக்கு எளிதல்லாத, நாராயணத்வாத் அபிச=நாராயண ஞயிருக்குந தன்மையினுலும், தேவே சத்வ=தேவர்கட்குத் தலேவனுயிருத்த லென்ன, அவ்யத்வ=அழிவில்லா திருத்தலென்ன, த்ருஹிண ஹர சுநா ஸீர முக்ய அமர ஓக=பிரமன் சிவன் இநதிரன் முதலான தேவர்களின் ஸமூகத்திற்கு, ப்ரத்யக்ஷ அந்தர்த் திபி: அபிச=தென்பட்டுக் கொண டிருக்கும்போதே மறைந்துவிடுவ தென்ன இவற்றுலும், முநீந்த்ர:= வால்மீகியாகிய முனிவர் பெருமான், விஷ்ணும்=இராமபிராணுகிய விஷ் ணுவை, பரம் ப்ரஹ்ம=பரப்ரஹ்ம மாக, அசகதத=கூறினர்.

(முன் ச்லோகத்தில் விஷ்ணுவே பரம்பொருளென்பதற்கு எட்டுக் காரணங்கள் கூறப்பட்டன. இந்த ச்லோகத்தில் அதற்கு மேலும் எட்டுக் காரணங்கள் கூறப்படுகின்றன.)

விசேஷவுரை.

இனி ஒன்பதாவது காரணம்— தேவேப்ய: அபீதிதாநாத் என்று கூறப்படுகிறது. தேவேபய:=பிரமன் உருததிரன சசீபதி முதலிய எல்லாத் தேவர்களுக்கும், அபீதி தாநாத்= அபயமளித்ததனுல் என்பது அதன் பொருள். ப்ரஹ்மருத்ராதி ஸர்வ தேவர்களுக்கும் அபயந் தருதலென் னும் இக்காரணம் விஷ்ணுவே எல லோரையும்விட உயர்ந்தவரென் பதை நிலேநாட்டுவதாகும்.

உலகில் பொதுவாக அபயமளித்த லென்பது, அஞ்சினவர்களுக்கு அவ் வச்சத்தைத் தீர்க்கவல்லவர்களா லேயே செய்யப்படுவதாகக் காணப் படுகின்றதன்றே? அச்சமோவென்ருல் தன்னுல் தீர்த்துக்கொள்ள முடியாத ஆபத்து முதலியவற்ருல் உண்டாக்கப் படுகிறது. ஆக ஒருவனுல் தீர்த்துக் கொள்ளவியலாத ஆபத்து முதலிய வற்றிலிருநது அவனேக் காப்பாற்று மவன் அவனேவிட அதிகமான சக்தி யைப் படைத்தவனுக இருக்க வேண் டும். இல்லேயேல் அவனேப் போலவே இவனுக்கும் ஆபத்தைப் போகக வல் லமை இல்லாமையால் அபயமளித்த லென்பது பொருந்தாமல் போய் விடும். அவனேவிட அதிக சக்தி யுடையவன் அவனேவிட உயர்ந் தவனே ஆவான். ஆகையால் பிரமன் முதலிய ஸகல தேவர்கணங்களுக்கும் அபயமளிக்கும் விஷ்ணுபகவானுக்கு அவற்றைவிட அதிகமான சக்தி அவ சியமாக இருக்க வேணடியுள்ளதனுல் ஸர்வ தேவர்க்கும் அபயமளித்த லாகிய இக்காரணம் விஷ்ணுவுக்கு எல்லாத் தேவர்களேவிட உயர்த்தி யைச் சாதித்துக் கொண்டே, அது காரணமாகவே எல்லாப் பொருள் களேக் காட்டிலும பரத்துவத்தை (உயர்த்தியை) நிலே நாட்டுகின்றது - என்பது இங்குக் கருத்தாகும்.

ஒருவனேவிடக் குறைந்த சக்தி படைத்தவன் கூட, அபயமளித்தால் தற்காலத்திய அவனது துக்கம் தீரு மென்று நினேத்தோ அல்லது அவனே ஏமாற்ற நினேத்தோ அவனுக்கு அபயமளிக்கக் கூடுமாகையால், அதிக சக்தியுள்ளவன்தான அபயமளிப்ப வனுக இருக்க வேண்டுமென்பது தவ றென்று கூறவேண்டாம். ஒருவனே விடச் சக்தியில் குறைந்தவனே அல் லது ஸமானமானவனே 'உனது பயத் தைப் போக்குகிறேன்' என்று கூறிய போதிலும மூடனல்லாத ஆராய்ச்சி யாளனெருவனுக்கு பயம் தீரக்காணு மையாலே, பயத்தைத் தீர்க்கவல்ல அபயமளிததலேச் செயயுமவன் அதிக சக்தி படைத்தவனுகவே இருகக வேண்டுமென்பது பொருந்துமாகை யால் என்க.

எல்லாத் தேவர்கட்கும அபய மளித்தலென்னும் இத்தன்மை—ஸ்ரீ ராமாயணம் பாலகாண்டம் பதினேந் தாம் ஸர்க்கத்தில் 25-27ல் 'இங் ஙனம் வேண்டப்பட்டவரும் நித்ய ஸூரிகளே ஆளுமவரும் தேவர் தலே வரும் எல்லோராலும் வணங்கப் பட்டவருமான விஷ்ணுவானவர்

தமிழாக்கம்:
திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்.
சிரோமணி வித்வான்
திருப்பதி.

சரணாகதி தருமத்தை அனுஷ்டித்து ஒன்றாகத் திரண்டிருக்கிற பிரமன் முதலான எல்லாத் தேவர்களையும் குறித்து 'பயத்தை விடுங்கள், உங்களுக்கு மங்களம் உண்டாகுக, உங்களுடைய நன்மைக்காக நான் இராவணனைப் போரில் கொல்லுகிறேன் என்று கூறினர்' என்னுமிடத்தில், அவரவர் பெயரால் குறிக்கப்பட்டவர்களும் குறிக்கப்படாதவர்களுமான எல்லாத் தேவர்களும் கருதப் படுகின்றனர். அவர்களில் பிரமன் சிவன் முதலியோர் சேர்ந்துள்ளனரென்பது 'பிரமன் முதலிய எல்லாத் தேவர்களையும்' என்றதனாலும், இதற்கடுத்த ச்லோகத்திலுள்ள 'பிறகு கந்தர்வர்களுடனும் ருத்திரனுடனும் கூடிய தேவர்கள்' என்ற வாக்கியத்தாலும் விளக்கமாகத் தெரிகின்றது.

விஷ்ணு பகவான் அபயமளித்ததனால் தேவர்களுக்கு அச்சம் தீர்ந்ததென்னும் இவ்விஷயம்—'பின்பு தேவர்களும் கந்தருவரும் ருத்திரனும் அப்ஸரஸ்ஸுக்களின் கூட்டங்களும் பகவானுடைய திவ்யாத்மஸ்வரூபத்தைப்பற்றிய துதிகளாலே பகவானைத் துதி செய்தனர்' (31) என்று அபயமளித்ததனால் மகிழ்ச்சி கொண்ட தேவர்கள் பகவானைத் துதித்ததாகக் காண்பதனாலும், 'பகைவரைத் தபிக்கும் தேவனே எமக்கெல்லோர்க்கும் நீரே மிகமிக உயர்ந்த தஞ்சமாகிறீர்' (24) என்னுமிடத்தில், தேவர்களுக்குப் பகவானிடம் அதிக சக்தியுள்ளமையை நிச்சயித்ததன் வாயிலாக அதிக நம்பிக்கையுண்டானமை கூறப்படுவதைக் காண்பதனாலும் அறியலாகிறது.

ஆகையால் தேவர்களனைவர்க்கும் அபயமளித்தலென்ற இக்காரணம், விஷ்ணு பகவானுக்கு எல்லோரைக் காட்டிலும் உயர்த்தியைச் சாதிக்க வல்லதேயாகையால் மிகவும் நன்கு பொருந்துமென்க.

இனிப் பத்தாவது காரணம்—வரவிதரணத: என்பதாகும். இங்கும் 'தேவேப்ய:' என்று முன்பு கூறியது வந்து பொருந்துகிறது. ஆக ப்ரஹ்ம ருத்ராதிகளான தேவர்கள் அனைவர்க்கும் வரமளித்ததனால்—என்பது இதன் பொருளாகத் தேறியது. இவ்விடத்திலும் வரமளிப்பவரைக் காட்டிலும் வரம்பெறுபவர் தாழ்ந்தவரென்பது உலக நீதியைக் கொண்டு அறியப்படுவதனால் இக்காரணத்திற்கும் முன்னைய காரணம் நிரூபிக்கும் போது கூறிய யுக்திகளால் விஷ்ணுவின் உயர்த்தியை நிலைநாட்டுந்தன்மை அறுதியிடத்தக்கதாகும். இங்கு வரமளித்தலென்பது முற்கூறிய அபயமளித்தலென்பதனோடு ஒன்றுபட்டதாகவோ ஒத்ததாகவோ இருந்தாலும் தனிப்பட இதனைக் கூறியது—அபயமளித்தலைக் காட்டிலும் வரமளித்தலென்பது பகவானுக்கு உயர்த்தியை விரைவாக அறிவிக்குமதாகையால் என்று அறிக.

'பல்லாயிரக் கணக்கான கோடி யுகங்கள் பிரமதேவன் விஷ்ணுவை ஆராதித்து மறுபடியும் மூவுலகங்களையும் படைக்கும் பதவியைப் பெற்றாரென்று கேள்விப்படுகிறோம்' (இதிஹாஸ ஸமுச்சயம் 14-8) என்றும், 'மஹானுதர்யசாலியான மஹாதேவன் (சிவபெருமான்) ஸர்வமேதமென்னும் யாகத்தில் தன்னையே அக்நியில் ஹோமம் செய்து (விஷ்ணுவை மகிழ்வித்து) தேவர்கட்குத் தலைவனாக ஆனார்' (பாரதம்-சாந்தி 20-22) என்றும் இவை முதலான ப்ரமாணங்களில் நாராயணனைக் குறித்து ப்ரஹ்ம ருத்ராதிகள் செய்த உபாஸநமும் அவர்களுக்கு நாராயணன் செய்த வரமளித்தல் முதலிய அனுகரஹமும் எல்லா விடங்களிலும் கூறப்படுவதனால், வரமளிப்பவனுக்கு உபாஸிக்கப்படுந்தன்மை உயர்த்தி மகிழ்விக்கப்படுந்தன்மை முதலியனவும் வரம் பெறுமவனுக்கு உபாஸிக்குந்தன்மை தாழ்ச்சி மகிழ்விக்குந்தன்மை முதலியனவும் எதிர்வாதம் செய்யாத ப்ராமாணிக பண்டிதர்கள் எல்லோராலும் இசையப்பட்டவையாகும்.

இத்தகைய வரதானமானது 'எல்லாவுயிர்கட்கும் நாதனாய் தேவர்களுக்கும் தேவனான விஷ்ணுவானவர் தேவர்களுக்கு இங்ஙனம் வரம் தந்து' (ராம-பால-15-29) என்று - அபயமளித்தலைக் கூறிய ச்லோகத்திற்கு அடுத்த ச்லோகத்திலேயே கூறப்பட்டுள்ளது.

இனிப் பதினோராவது காரணம்-ஸர்வ லோகை: துதத்வாத் என்பதாகும். தேவர் மனிதர் முதலான எல்லா ஜனங்களாலும் துதிக்கப்பட்டதனால் என்பது அதன் பொருள். இக்காரணமும் முற்காட்டிய இரண்டு காரணங்கள் போலே விஷ்ணுவுக்குப் பரத்துவத்தைச் சாதித்தே தீரும். ஒத்தாரும் மிக்காரும் இல்லாமை இதனால் குறிப்பாகக் காட்டப்படுகிறது ஒருவனை - அவனோடு ஸமானமானவனோ அவனைவிட உயர்ந்தவனோ துதி செய்ததாகக் காணப்படவில்லையன்றோ? இத்தகைய எல்லோராலும் துதிக்கப்படுந்தன்மை 'பின்பு தேவர்களும் கந்தருவர்களும் உருத்திரனும் அப்ஸரஸ்ஸுக்களின் ஸமூஹமும் பகவானுடைய திவ்யாத்மஸ்வரூபத்தைப் பற்றிய துதிகளாலே மதுஸூதனனைத் துதித்தனர், (ராமா. பால. 15-30) என்று முற்கூறிய ச்லோகத்திலேயே கூறப்பட்டது.

இனிப் பன்னிரண்டாவது காரணம்-ஸர்வாந்தர்யாமி பாவாத் என்பதாகும். சேதனர்கள் அசேதனங்கள் (உயிர்கள் ஜடப் பொருள்கள்) ஆகிய எல்லாப் பொருள்களுக்கும் அந்தர்யாமியாக (உட்புகுந்து நியமிப்பவனாக) இருப்பதனால் என்பது இதன் பொருள். எல்லாவுலகிற்கும் உட்புகுந்து அடக்கியாளுவதனாலென்பது காரணமாகத் தேறிற்று. எல்லாவுலகிற்கும் அந்தர்யாமியாக இருத்தலென்பது பரப்ரஹ்மத்தின் தனிப்பட்ட தருமமாகும்.

அங்ஙனமேயன்றோ - ப்ருஹதாரண்யகோப நிஷத்து ஐந்தாமத்தியாயம் ஏழாவது ப்ராஹ்மணம் பதி

ஞுருவது கண்டத்தில் 'எவன் பூமி யில் இருப்பவனுய் பூமியின உள்ளே யும் இருக்கிருனே, எவனே பூமி அறிய மாட்டாதோ, எவனுக்கு பூமி சரீர மாகிறதோ, எவன் பூமிகுள இருந்து கொண்டு அதனை ஒரு காரியத்தில் மூளும்படியும் ஒரு காரியத்திலிருந்து மீளும்படியும் நியமிக்கிருனே (=தூண்டுகிருனே) இத்தகைய அந்தர்யாமியான பகவான் உனக்கு - அம்ருதனை (=மரணமில்லாமையை இயல்பாகவே உடைய) ஆத்மாவாகிருன்' என்று தொடங்கி (ஜலம் முதலிய பதினெட்டுப் பொருள்களிலும் பகவான் அந்தர்யாமியாக இருப்பதைக் கூறிக் கடைசியாக) எவன் ஜ்ஞாநஸ்வரூபனுன ஆத்மாவில் இருப்பவனுய் ஆத்மாவின் உள்ளேயும் இருக்கிருனே, எவனே ஆத்மா அறிய மாட்டாதோ, எவனுக்கு ஆத்மா சரீரமாகிறதோ, எவன் ஆத்மாவுக்குள இருந்து கொணடு அதனே ஒரு காரியத்தைச் செய்யும்படியாகவும் ஒரு காரியத்தைச் செய்யாதபடியாகவும் நியமிக்கிருனே, இத்தகைய அந்தர்யாமியான பகவான் உனக்கு அம்ருதனை ஆத்மாவாகிருன்', 'எவன் ரேதஸ்ஸில் (=கர்ப்பம் தரிக்கக் காரணமான வீரியத்தில்) இருப்பவனுய் ரேதஸ்ஸின் உள்ளும் இருக்கிருனே, எவனே ரேதஸ்ஸு அறியமாட்டாதோ, எவனுக்கு ரேதஸஸு சரீரமாகிறதோ, எவன் ரேதஸ்ஸுக்குள் இருந்து கொண்டு அதை கர்ப்பமாக மாறும்படியும் மாருமலிருக்கும்படியும் நியமிக்கிருனே, இத்தகைய அந்தர்யாமியான பகவான் உனக்கு அம்ருதனை ஆத்மாவாகிருன், 'எவன் யாராலும் காணப்படாதவனுய்க் கொண்டு எல்லாவற்றையும் காண்கிருனே, எவன் யாராலும் கேட்கப்படாதவனுய்க் கொண்டு எலலாவற்றையும் கேட்கிருனே, எவன் யாராலும் ஆராயப்படாதவனுய்க் கொண்டு எல்லாவற்றையும் ஆராய்கிருனே, எவன் யாருடைய கண்ணுல்காண்பது போன்ற த்யானத்துக்கும் இலக்காதவனுய்க் கொண்டு எல்லாவற்றையும் அத்தகைய த்யானத்துக்கு இலக்காக்கு கிருனே, இவனேக் காட்டிலும் வேறான காண்பவனும் கேட்பவனும் ஆராய்பவனும் காண்பதுபோன்ற த்யானத்தைச் செய்பவனும் இல்லேயோ, இப்படிப்பட்ட அநதர்யாமியான பகவான் உனக்கு அம்ருதனுன ஆத்மா வாகிருன்' எனபதீருக யாஜ்ஞவல்க்யர் உத்தாலகரைக் குறிததுக் கூறிய தாகக கேட்கப்படுகிறது.

இங்கு பூமி ஜலம் அக்நி ஆகாசம் காற்று முதலாக உளள ஸகல சேதநாசேதநங்களிலும் (ஆத்மாககளிலும ஜடப் பொருள்களிலும்) உட்புகுதல் உட்புகுந்து தூணடுதல் முதலியன பரப்ரஹமமாகிய பகவானுக்குத் தனிப்படட தன்மைகளென்று 'பூமிககுள் இருப்பவன், பூமிக்குள் புகுந்து தூண்டுகிருன்', ஜலத்துக்குள் இருப்பவன், ஜலத்துக்குள் புகுந்து தூண்டுகிருன்' என்றிவை முதலான வாக்கியங்களால் அறிவிககப்படுகிறது. இங்ஙனம் உட்புகுந்து தூண்டுமவன் ஜீவாத்மாவல்லன், பரமாத்மா தான் என்னும் இவ்விஷயம்—பூமி தொடங்கி ரேதஸ்ஸு வரையில் உள்ள இருபத்தொரு பொருள்களே யும் தனித்தனியாகக் கூறும் ஒவ்வொரு தடவைகளிலும் ஓதப்படுகின்ற-பிறருடைய அருளாலன்றி இயற்கையாகவே மரணமிலாதவனென்று அறிவிக்கினற 'அம்ருத: என்ற சொல்லாலே விளக்கமாகக் காட்டப்பட்டது. கடைசியாக, காணப்படாமை முதலியவற்ருேடு கூட கண் முதலிய உறுப்புக்களின் உதவியாலன்றி இயல்பாகவே எல்லாவற்றையும் காணுதல் முதலிய வற்றைஅறிவிக்கிற-'பிறரால் காணப்படாதவனுய்க கொண்டு எல்லாவற்றையும் காண்பவன், பிறரால் கேட்கப்படாதவனுய்க் கொண்டு எல்லாவற்றையும கேட்பவன்' என்றிவை தொடக்கமான வாக்கியங்களிஞல் பூமி முதலான எல்லாப் பொருள்களேயும் உள்ளே புகுந்து நியமிப்பவன் பரமாத்மாவே என்பது வலியுறுத்தப்பட்டது.

அங்ஙனமே தைத்திரீயாரண்யகம் மூன்றும் ப்ரசநம் பதினேராவது அநுவாகத்தில், 'ஜநங்களின் உட்புகுந்து தூண்டுமவன்' என்றும், 'ஜனங்களின் உட்புகுந்து தூண்டுமவன் எல்லாவற்றுக்கும் ஆத்மா' என்றும் ஸர்வாந்தர்யாமியாயிருக்குந்தன்மை ப்ரஹ்மத்திற்கேயுரிய தனித்தன்மையென்று கேட்கப்படுகிறது. மேலும் இங்ஙனமே தைத்திரீயோபநிஷத்து ஆனந்தவல்லியிலுள்ள 'ஆனந்த மயனுன பரமாத்மா அதைப் படைத்து அதற்குள்ளேயே புகுந்தான்' என்றிது முதலான வாக்கியங்களிலும் இத்தகைய அந்தராத்மத்வம் (உட்புகுந்து நியமிக்கும் தன்மை) ஆனந்த மயமான ப்ரஹ்மத்தின் தன்மையாகக் கேட்கப்பட்டுள்ளது.

(தொடரும்)

## அஷ்ட பந்தனப் பொருட்கள்

| | | |
|---|---|---|
| கொம்பாக்கு | பங்கு | 1 |
| கருங்குங்கிலியம் | ,, | 3 |
| சுக்கான் | ,, | ¾ |
| காவிக்கல் | ,, | 3 |
| வெண்மெழுகு | ,, | 3 |
| வெண்ணெய் | ,, | 3 |
| செம்பஞ்சு | ,, | 3 |
| சாதிலிங்கம் | ,, | ¼ |

திருமதி கமலா மாரியப்பன் — கோயம்புத்தூர்.

# பெரிய உடையாரின் பெருமை

திரு. எம்பார் V. ரங்காச்சாரி, சீர்காழி

“இராமபிரான் உணமை உரைபபவன்” என்பது மிகவும் பிரஸித்தமானது. அவன் ஸீதையை உயிருக்கும் உயிராய் எணணியிருப்பவன். ஸீதையிடம் எல்லையறற அன்புள்ளவன். அவ்வாறு அன்புள்ள அவன் தன் அன்பு நிலைக்கு ஏற்ப, அந்த ஸீதையைப் பிரிந்து தான் தரித்திருக்க முடியாதநிலையை“ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாம் அஸிதேக்ஷணாம்” என்று அருளிச் செய்தனன். அதாவது “கருங்கண்ணியான ஸீதையை விட்டுப் பிரிந்து க்ஷணகாலமும் உயிருடன் இரேன்” என்றனன். இங்ஙனம் அருளிச் செய்த இராமபிரான் பத்து மாதம் ஸீதையைப் பிரிந்து உயிருடன் இருந்தனன். இஃது இராமபிரானுக்கு எங்ஙனம் பொருந்தும்? என்கிற வினா எழுகின்றது. இந்த வினாவிற்கு பெரியவாச்சான் பிள்ளை பொருத்தமான சமாதானம் அருளிச செய்திருககிறார். அந்த ஸமாதானமானது : “ஜடாயு என்பவர் இராமபிரானிடம் பேரன்பு பெற்றிருந்தவர். இராமபிரான் மாயா ம்ருகத்தைக் கொன்று, பஞ்சவடி ஆச்ரமத்தில் வந்து ஸீதையைக் காணாது, மானே! கண்டாயா? மரமே! கண்டாயா? என்று தேடி வரும்போது அந்த ஜடாயு இராம பிரானைக் கண்டார். ஜடாயு தாம் முமூர்ஷுவாயிருக்கச் செய்தேயும், தம்முடைய ரக்ஷையில் கண்ணோட்டமின்றிகே ‘யாம் ஓஷதிமிவ ஆயுஷ்மன்! அன்வேஷஸி மஹாவநே’ என்று பெருமாளை ஆயுஷ்மன் என்று விளித்ததுணடே இது மிகச்சிறநத மங்களா சாஸனமாகும்’

கரன் முதலான பதினாலாயிரம் அரக்கரைக் கொன்ற இராமபிரான் வீரத்தன்மையை ஜடாயு மஹாராஜர் கண்கூடாகக் கணடவராயிருப்பினும், பிரித்த இராவணன் க்ரூரத்தன்மை, பிரிந்த ஸீதையின் சிறப்பு, பிரிவில் உண்டான இராமபிரான் திருமேனியின தளர்த்தி இவற்றைக் கண்டே, தம் அளவு கடந்த அன்பு நிலைக்கு ஏற்ப, மிகக் கலங்கி, தம் உடல்நிலை மோசமாயிருப்பதையும் கணிசியாது “இராமபிரான் ஒருகுறையுமின்றிப் பல்லாண்டு வாழ வேணும்” என்று விரும்பியே மேலே தெரிவித்த ஆயுஷ்மன்! என்றே இராமபிரானின் ஆயுஸ்ஸை வேண்டிக் கொண்டிருக்கிறார் அன்றோ! ஜடாயு மஹாராஜர். இந்த மங்களா சாஸனமே இராமபிரான் உயிர் பிழைத்திருந்ததற்குக் காரணம் என்பதே நம் ஆசார்களின் நிர்வாஹம். இதையிட்டே ஜடாயு மஹாராஜரைப் பெரியவுடையார் என்றது.”

ஸ்ரீவசன பூஷணத்தில் “பெரியவுடையாரும், பிள்ளைத்திருநறையூர் அரையரும் உடம்பை உபேக்ஷித்தார்கள்” என்னும் சூர்ணையில் ஜடாயு மஹாராஜரைப் பற்றி மணவாள மாமுனிகளின் வ்யாக்கியானங்களில் உள்ள வசனங்களை அனுபவிப்போமாக. “இராவணன் வந்து பிராட்டியைப் பிரித்துக் கொண்டு போக அப்போது பிராட்டி ஜடாயு மஹாராஜரை ஒரு வ்ருக்ஷத்தின் மேலே கணடு “என்னை இவன் இப்படி அபஹரித்துக் கொண்டு போகா நின்றான்” என்று ஜடாயு மஹாராஜர் பேரைச் சொல்லிக் கூப்பிட, உறங்குகிறவர் அந்த ஆர்த்த த்வநியைக் கேட்டுணர்ந்து ,ராவணன் கொண்டு போகிறபடியைக் கண்டு “உனக்கு இது தகாது காண்” என்று தர்மோபதேசம் பண்ணினவளவில் அவன் கேளாமையாலே “நம் ப்ராணனோடே இது கண்டிருக்கக் கடவோம் அல்லோம், யுத்தம் பண்ணி பிராட்டியை மீட்குதல், இல்லையாகில் தம் உயிரை முடிதல் செய்யக்கடவோம்” என்று அத்யவஸித்து அதி பல பராக்ரமராகையாலே ராவணனோடே மஹா யுத்தத்தைப் பண்ணி ராவணன் கையாலே அடிபட்டு விழுந்து இருக்கும் நிலையிலே இராமபிரானை ஆயுஷ்மன்! என்று மங்களாசாஸனம் செய்தருளினன்” என்றவாறு.

ஸ்ரீ ராமாயணத்தில் சக்ரவர்த்தி திருமகனுக்கு மங்களாசாஸனம் செய்தவர்கள் பலருளரெனினும், இந்த ஜடாயு மஹாராஜருடைய மங்களா சாஸனந்தான் தலைசிறந்ததாயிற்று. இதனாலே இவர்க்கு பெரியவுடையாரென்று திருநாமமாயிற்று.

*

# கேதாண்டபட்டி



ஸ்ரீ ஆராவமுதப் பெருமாள்

**ஓர் மஹான் எழுந்தருளல் :**

பல வருஷங்களுக்கு முன்னால் ஸ்ரீ முஷ்ணம் என்னும் க்ஷேத்திரத்தில் இருந்து ஸ்ரீவத்ஸ கோத்ரம் சக்ர வர்த்தி குலத்தில் அவதரித்த ஒரு மஹான் பாதயாத்திரையாக பல திவ்ய தேசங்கள் ஸேவித்து வரும் பொழுது கேதாண்டபட்டி என்கிற ஊர் வந்து சேர்ந்தார். அங்கு வந்த ஸ்வாமிக்கு "நோக்கும் பக்கமெல்லாம் கரும்பொடு செந்நலோங்கு செந்தாமரை" என்று ஆழ்வார் ஸாதித்தபடி எங்கும் பார்ப்பதற்கு அழகாக இருக்கும் கரும்பு, வாழை, தென்னை முதலிய இயற்கை அழகைக் கண்டு, அங்கேயே கொஞ்ச நாட்கள் தங்க (ஸ்வாமிக்கு) ஆசை தோன்றியது.

இலங்கை நோக்கி எடுத்துச் செல்லப்பட்ட அரங்கன் காவிரியின் இயற்கை அழகைக் கண்டு, அங்கேயே தங்க ஆசைப் பட்டது போல் நம் ஸ்வாமியும் வட தேச யாத்திரையாகச் சென்றவர் மேலே செல்ல மனமில்லாமல் இங்கேயே தங்கிவிடுகிறார்.

**நதியும் பாதுகையும்**

ஊரில் கோயில் இல்லாததினால், "கோயில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்கிற வசனப்படி, நம் ஸ்வாமியும் அங்கு தங்க மனமில்லாமல் பக்கத்திலேயே இரண்டு பர்லாங் தூரத்திலிருக்கும் கல்லார் என்று சொல்லக்கூடிய ஒரு சிறு ஆற்றங்கரையில் வசிக்க திருவுள்ளம் கொண்டு அங்கேயே ஒரு சிறு குடில் அமைத்து தான் ஏற்கெனவே கொண்டு வந்திருந்த ஸ்ரீஸாளக்ராம மூர்த்திகளுக்குத் திருவாராதனம் பண்ணிக்கொண்டு, ஞான வைராக்ய அனுஷ்டான சீலராய் மிகவும் தூய்மையுடன் வாஸம் செய்து வந்தார். நாளடைவில் ஸ்வாமிக்கு பல சிஷ்யர்களும், ஆப்தர்களும் சேர்ந்தார்கள்.

சுமார் இரண்டு வருட காலங்கள் அந்த ஆற்றங்கரையிலேயே ஸ்வாமிகள் வசித்து வந்ததாகத் தெரிய வருகின்றது. இதன் மத்தியில் ஸ்வாமிக்கு ஓர் எண்ணம் உண்டாகியது. "எப்படியும் இந்த ஊரில் ஒரு கோயில் கட்ட வேண்டும்" என்று திருவுள்ளத்தில் ஆழமான எண்ணம் தோன்றியது. இருப்பினும், 'எம்பெருமானை அடைய அவன் திருவடிதான் தஞ்சம்' என்று அபிப்ராயப்பட்டு, முதலில் திருவடி ஆராதனம் செய்ய திருவுள்ளம் கொண்டார். அதன்படி ஓர் நாள் அந்த ஆற்றின் நடுவில் பெரியதொரு பாறையில் ஐந்து ஜோடி திருவடி நிலைகளை செதுக்கி வைத்தார். அதற்கு முறையே, ஸ்ரீரங்கம், யதுகிரி, ஸ்ரீசைலம், அஸ்தீசம், அமுதன் என்ற பெயர்களையும் க்ரந்தாக்ஷரத்தில் எழுதி, ஸம்ப்ரோக்ஷணாதிகள் முதலியன செய்து வைத்து, திருவாராதனமும் செய்து வந்தார். அது முதற்கொண்டு அந்த கலலாறுக்கு பாதுகாநதி (திருவடியாறு) என்ற பெயரும் வழங்கலாயிற்று. இன்றளவும் நதியில் பாதுகைகள் இருப்பதை நாம் காணலாம்.

**கோயில் திருப்பணி :**

இப்படியாக பாதுகா நதியில் அனுஷ்டானமும், பாதுகை ஆராதனமும் செய்து கொண்டு பல சிஷ்யர்களுடன் விளங்கி வந்த நம் ஸ்வாமி, ஊரில் கோயில் கட்ட, அதற்கு வேண்டிய இடத்தையும் ஸம்பாதித்தார். ஊருக்கு எழுந்தருளி கோயில் வேலைகளைக் கவனிக்கலானார். கட்டடம் வெகு அழகாகக் கிளம்பிவிட்டது. சிறியதாகவும், அழகாகவும் கோயிலைக் கட்டிமுடித்துவிட்டார். ஸ்வாமியின் வெகு நாள் எண்ணமும் பூர்த்தியாகிவிட்டது. கோயிலில் எம்பெருமான் ஸ்ரீவரதராஜனை ப்ரதிஷ்டை பண்ணி, க்ரமமாக திருவாராதனம் நடத்தி வந்தார். பெரியதொரு அக்ரஹாரமும், ஸ்ரீவரதன் ஸந்நிதியும் பார்ப்பதற்கு வெகு அழகாக இருந்தது. கோயில் திருவாராதனத்திற்கு வேண்டிய நில புலன்களையும் ஏராளமாகச் சேர்த்து, என்றும் ஸ்திரமாக திருவாராதனம் நடக்கத் தகுந்த ஏற்பாடுகள் பண்ணிவிட்டார். நித்யப்படி ஆராதனமும், சில விசேஷ உற்சவாதிகளும் விமரிசையாக நடந்து வந்தன. பெரியதொரு மஹான்கள் கோஷ்டியோடு ஸேவை, சாத்துமுறை முதலியன நடந்து எம்பெருமான் வரதன் வெகு அற்புதமாக ஸேவை தந்து வந்தார்.

திரு. ஏ. இராகவாசாரியார்
கேதாண்டபட்டி.

**ஸ்வாமியின் கனவு :**

இப்படி இருக்கும்போது, ஒரு நாள் நம் ஸ்வாமி ஒரு கனவு கண்டார்.

# திருமலையில்
## தி. தி. தேவஸ்தான
# காட்டேஜ் கட்டண விவரங்கள்

| காட்டேஜ் விவரம் | | கட்டணம (நாள் ஒன்றிற்கு) |
|---|---|---|
| டி. பி. சி. | | ரூ. 25/- ரூ. 15/- ரூ. 10/- |
| டி.பி.சி. 3வது வரிசை (ஹிட்டா இல்லாதது) | | ரூ. 10/- |
| ஹில் வ்யூ டீலக்ஸ் காட்டேஜ் | | ரூ. 20/- |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதி | பெரியன | ரூ. 40/- |
| ,, ,, | சிறியன | ரூ. 20/- |
| ஹில் வ்யூகாட் டேஜ் | | ரூ. 10/- |
| சங்கு மிட்டா காட்டேஜ் | | ரூ. 20/- |
| சேஷாத்ரி நகர் காட்டேஜ் | | ரூ. 20/- |
| அஞ்சனாத்ரி காட்டேஜ் | | ரூ. 20/- |
| கருடாத்ரி நகர் காட்டேஜ் | | ரூ. 20/- |
| திருமணக்கூடம் (3-வது சத்திரம்) | | ரூ. 15/- |
| சிறப்பமைப்பு கொண்ட காட்டேஜ்கள் | | ரூ. 75/- |
| டி. சி. சி. (உள்ளே உள்ள காட்டேஜுகள்) | | ரூ. 50/- |

**எஸ். வி. விருந்தினர் விடுதி**

| | |
|---|---|
| பெரிய அறைத்தொகுதிகள் | ரூ. 50/- |
| மூலே அறைத்தொகுதிகள் | ரூ. 40/- |
| சிறிய அறைத்தொகுதிகள் | ரூ. 35/- |
| எச். ஆர். ஜி. காட்டேஜுகள் | ரூ. 150/- |
| மோடி பவன் | ரூ. 100/- |

**திருமணக்கூடங்கள் (காட்டேஜுகள்)**

| | |
|---|---|
| பாலாஜி காட்டேஜ் | ரூ. 500/- |
| ரூயா காட்டேஜ் எண். 248 | ரூ. 80/- |
| கோகினேனி காட்டேஜ் எண். 226 | ரூ. 80/- |
| சி. சி. காட்டேஜ் எண். 237 | ரூ. 100/- |
| எஸ். எம். சி. கிழக்கு எண். 272 | ரூ. 50/- |
| ஏ. டி. சி. எண். 99 | ரூ. 80/- |
| டி. பி. (உள்பக்க காட்டேஜ்) | ரூ. 50/- |
| டி. பி. வி. வி. சி. | ரூ. 50/- |
| டி. பி. காட்டேஜ் (தனிச் சிறப்புக் கொண்டது) | ரூ. 75/- |
| ஏ. டி. சி. மற்றும் டி.பி.சி. ஒரு அறைத்தொகுதி ஹீட்டர் உள்ளது | ரூ. 12/- |
| ஹீட்டர் இல்லாதது | ரூ. 10/- |

அக்கனவில் திருக்குடந்தை ஸ்ரீ ஆராவமுதன ஸேவை ஸாதித்து, "என்னை வந்து என்னைக் கேட்டு வாங்கி, உன் கோயிலில் வைத்து ஆராதிப்பாய்" என்று சொனனதாக இருநதது. கனவு கண்டு கண் விழித்த ஸ்வாமி, "விடியற் காலத்தில் கணட கனவு வீண் போகாது" என்று எண்ணி, கூட இருநத சிஷ்யர்களிடம் இவ்விஷயத்தைச் சொல்லி, எல்லோருமாக குடந்தை நோக்கிப் பயணமானார்கள். (குடந்தையில் இதற்கு முன் பூமியில் இருந்து, பல உலோகங்களினால் ஆன விகரஹஙகள் கண்டுபிடிக்கப்பட்டு இருக்கின்றன) குடந்தையில் ஸ்ரீஆராவமுதன் கனவில் அங்கிருக்கும் கோயில் அதிகாரிகளுக்கு இவ்விஷயத்தைச் சொல்லி, "என்னைக் காண இங்கு வரும கேதாணடபட்டி ஸ்வாமிகளுககு எழுந்தருளப் பண்ணி கொடுங்கள்" என்று உத்தரவிட்டார். அது கண்டு அவர்களும் இவர்களுடைய வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். இருவரும் ஒருவருக்கொருவர் நடந்த கனவுகளைச் சொல்லி, எம்பெருமானுடைய லீலைகளைக் கண்டு ஆனந்தித்தார்கள்.

**அமுதன் எழுந்தருளல;**

உடனே கோயில் அதிகாரிகள ஒன்று சேர்ந்து, பூமியில் கிடைத்த எம்பெருமான்களில் கனவில் குறிப்பிட்ட ஒருவரை உபய நாச்சிமார்களுடன் எழுநதருளப் பண்ணிக் கொடுக்க, இவர்களும் அதிஸந்தோஷத்துடன கை கூப்பி, வாய் பொத்தி அஞ்சலி அஸ்தத்துடனும், மேளதாளத்துடனும் எழுந்தருளப் பண்ணிக் கொணடு வந்து, நல்ல தொரு முகூர்த்தத்தில் பெரியதொரு ஸம்ப்ரோக்ஷணமும் பண்ணி, வரதனுக்கு ஸமீபத்தில் எழுந்தருளப் பண்ணினார்கள். ஆராவமுதன் என்ற திருநாமத்தையும் சாத்தினார்கள் அதி முதற்கொண்டு, கோயிலும் 'ஸ்ரீ ஆராவமுதஸ்வாமி தேவஸ்தானம்' என்றே ஆகிவிட்டது. இப்படியாக ஸ்ரீ வரத

னுடன் சேர்ந்த "அபர்யாப்தாமிருதன்" (ஆராவமுதன்) இன்றளவும் வெகு அற்புதமாக ஸேவை தருகிறான்.

ஆழ்வாரின் வாக்கு :

இதுவரையில் விவரித்ததைச் சொல்லக் கேட்டு, என்னுடைய சிற்றறிவிற்குத் தோன்றிய அளவில் எழுதியுள்ளேன். இங்கு வந்து அமுதனை ஸேவித்த அடியேனுக்கு ஓர் எண்ணம் தோன்றியது. ஏற்கனவே வரதராஜன் எழுந்தருளியிருக்கும் ஸந்நிதியில் அமுதன் வலிய தானாக வந்து ஸேவை தருவது ஏன்?

அதாவது 'திருமங்கை மன்னனின்' குடந்தை அமுதனைப் பற்றிய பாசுரங்களில் ஓர் அடி ஞாபகம் வருகிறது. அங்கு மங்களா சாஸனம் பண்ணிய மங்கை மன்னன் "செல்வம் மல்கு தென் திருக்குடந்தை" என்று சொல்லியிருப்பது உலகமறிந்ததே. தென் என்பதற்கு பல அர்த்தங்கள் இருந்த போதிலும், ப்ரதானமான திக்கையும் குறிக்கின்றது. செல்வம் நிறைந்ததான தமிழ் தேசத்தில் தெற்கு திக்கில் இருக்கக் கூடிய திருக்குடந்தை என்பது ஆழ்வார் மங்களா ஸாசனம். அப்படியானால், வேறு ஓர் திக்கில் ஒரு அமுதன் ஸந்நிதி தோன்றப் போகிறது என்ற (முக்காலமும் அறிந்த நம் கலியனுக்கு) எண்ணமுண்டாயிற்று. ஆகையால் அங்கு, மங்களா ஸாசனத்தில் தென் திருக்குடநதை என்று ஸாதித்தார் போலும்! மேலும் இந்த அமுதன் அந்த திவ்ய தேசத்திலிருந்தே எழுந்தருளப்பட்டவர். இங்கு நம்மால் பண்ணினதோ, அல்லது வேறு எங்கிருந்தாவது எடுத்து வந்ததோ அல்ல. ஆழ்வாரின் வாக்கை மெய்ப்பிக்கத் திருவுள்ளங்கொண்ட குடந்தை அமுதன் தன் போன்ற ஒருவனைக் கொடுத்து, தமிழ்நாட்டில் மேற்கு திக்கில் இருக்கும் இந்த கேதாண்டபட்டிக்கு எழுந்தருளினார் போலும். அது முதல் இவ்வூருக்கு "மேல் திருக்குடந்தை" என்ற பெயரும் உண்டானதாகத் தெரிகிறது. என்னே எம்பெருமான் லீலை! ஆழ்வாரின் வாக்கும் நன்கு பலித்து விட்டது. மேல் திருக்குடந்தையும் ஏற்பட்டுவிட்டது.

மங்களா ஸாசனம் :

பல பெரியோர்களும், மஹான்களும் வாழ்நத ஊர்தான் ஸ்ரீ கேதாண்டபட்டி. ஒரு கோயில் என்று இருநதால் அதை ஆழ்வார்களோ, ஆசாரியர்களோ அல்லது மஹான்களோ மங்களா ஸாசனம் செய்திருக்க வேண்டுமென பெரியோர் கூறுவர் அதன்படி பார்ப்போமானால், லோக ப்ரஸித்தராக ஸமீபத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமிக்கும், ஸ்ரீமத் கருடபுரம் ஸ்வாமிக்கும், இவ்வூரில் எழுந்தருளியிருந்த பெரிய மஹானான கேதாண்டபட்டி ஸ்வாமி (ஸந்நியாச ஆசிரமம்) ஆசாரியராகிறார். "கேதாண்டபட்டி ஸ்வாமி" என்றே சிஷ்யர்களால் அன்புடன் அழைக்கப்பட்ட இவ்வூர் ஸ்வாமி, உலகம் போற்றுபவர் ஆவார். "ஸ்ரீமத் ரங்கராமாநுஜ மஹா தேசிகன்" என்று போற்றப்படும் கேதாண்டபட்டி ஸ்வாமிக்கு ஜநநம் லக்ஷ்மீபுரத்தில் இருந்த போதிலும், ஸ்வாமி தன் வாழ்நாள் பூராகவும் இவ்வூரிலேயே தங்கியிருந்தார். ஸ்வாமியின் திருநக்ஷத்திரம் ஐப்பசி மூலம். முனித்ரய ஸம்ப்ரதாயத்தில் பெரியதொரு ஆசாரயபீடம் வகித்திருக்கிறார். ஸ்வாமியின் திருவடி சம்பந்தப்பட்டவர்கள் திருப்பதி ஸ்வாமி, கோழியாலம் ஸ்வாமி, திருவேந்திபுரம் ஸ்வாமி, கருடபுரம் ஸ்வாமி மற்றும் அவர்களுடைய திருவடி சம்பந்தப்பட்டவர்களாவார்கள். இப்படி ஓர் மஹான் வாழ்ந்த ஊர் கேதாண்டபட்டியாகும். இவ்வூரில், ப்ரஸித்தி பெற்ற ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமி இரண்டு வருட காலம் எழுந்தருளியிருந்து எம்பெருமானை மங்களா சாஸனம் பண்ணிக்கொண்டு பல சிஷ்யர்களுக்கு காலக்ஷேபாதிகள் ஸாதித்து வந்துள்ளார். ஸமீபத்திலிருக்கும் கூத்தாண்ட குப்பத்தில் ரங்கராமானுஜ சக்ரவர்த்தி என்ற மஹானும் மற்றும் பல பெரியோர்களும் இங்கு எம்பெருமானை மங்களா சாஸநம் செய்திருக்கிறார்கள். ஸ்ரீமத ஹோபிலமடம் 42-வது பட்டம் ஸ்ரீமதழகிய சிங்கர் இரண்டு நாட்கள் இங்கு எழுந்தருளியிருந்து எம்பெருமானை மங்களா ஸாசநம் செய்தருளியிருக்கிறார். இப்படியாக பல மஹான்களால் மங்களாஸாசனம் பண்ணப்பட்டவராகிறார் நம் அமுதன்.

தற்சமயம் இக்கோயில் சக்ரவர்த்தி குலத்தில் தோன்றிய பரம்பரை தர்ம கர்த்தாக்களினாலும், Endowment Board கவர்மெண்ட் ஆபீஸர்களினாலும் நன்கு பராமரிக்கப்பட்டு நித்யப்படி இரண்டு வேளை திருவாராதனமும், சில உத்ஸவாதிகளும் நடந்து வருகின்றன.

போக்குவரத்து வசதிகள் :

இவ்வூர் வட ஆற்காடு மாவட்டத்தில், வாணியம்பாடிக்கு அடுத்த கேதாண்டபட்டி என்கிற ரயில்வே நிலயம் ஸமீபமுள்ளது. ரயில்வே நிலயத்திற்கும் ஊருக்கும் இரண்டு பர்லாங் தூரமுள்ளது. வாணியம்பாடியிலிருந்து கிருஷ்ணகிரி, வயா-நாற்றம்பள்ளி போகும் பஸ் மார்கத்தில் கேதாண்டபட்டி இருக்கின்றது. பஸ நிலயத்திற்கும் ஊருக்கும் இரண்டு பர்லாங் தூரமுள்ளது. பஸ் நிற்குமிடத்திலிருந்து கோயில் விமானம் நன்கு ஸேவையாகும்.

முடிவுரை :

இப்படியாக கிழக்கு மேற்கில் அக்ர ஹார வீதியும், கிழக்கே திருமுக மண்டலத்துடன் நின்ற திருக்கோலத்தில் ஸேவை தரும் மூலவர் ஸ்ரீ வரத ராஜனும், உற்சவர் வரதன், ஸ்ரீஆராவமுதன், கண்ணன், சக்ரத்தாழ்வார் மற்றும் சூடிக்கொடுத்த நாச்சியார், காரி மாறன், பெரும்பூதூர் வள்ளல், வேதாந்த வாரியன், மற்றும் தனிக் கோயில் கொண்டிருக்கும் மூலவர் பெருந்தேவித் தாயார், உற்சவர் கோமளவல்லித் தாயார் - இவர்கள் விசேஷமாக இன்றளவும் ஸேவை தந்து வருகிறார்கள். ப்ரஸித்தி பெற்ற கேதாண்டபட்டிக்குச் சென்று அமுதனைத் தொழுது பேரின்ப பெரு வாழ்வு அடைவோமாக!!

அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு!!

பாசுரம் :

"வாராவருவாய் வருமென் மாயா
மாயா மூர்த்தியாய்
ஆராவமுதாய் அடியேன் ஆவி
அகமே தித்திப்பாய்
தீராவினைகள் தீர என்னையாண்டாய்
திருக்குடந்தையூரா
உனக்காட்பட்டும் அடியேன் இன்
னம் உழல்வேனோ"
—நம்மாழ்வார்.

*

# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# நன்கொடைத் திட்டத்தின் கீழ் குடில்கள்

திருமலையில் யாத்திரிகர்களின் நலனுக்காக நன்கொடைத் தொகைகளின மூலம் பல தங்குவசதிகளான குடில்கள், அறைத்தொகுதிகள், சத்திரங்கள், விருந்தினர் விடுதிகள் போன்றவற்றைக் கட்டுவதற்குப் பொது மக்களிடமிருந்து தேவஸ்தான மேலாண்மை நன்கொடைகள் பல பெற்று வருகின்றது. இத்திட்டத்தின் விவரங்கள் பின் வருமாறு.

## கருடாத்ரி நகர் குடில்கள் திட்டம்

இத்திட்டத்தின்கீழ் ஒவ்வொன்றும் 4 அறைத் தொகுதிகளைக் கொணடு விளங்குமபடியான 18 குடில் கள் கட்டிடத்தின் அடித்தளத்திலும், முதல் தளத்திலும் கட்டப்படும்.

* பொதுத் தாழ்வாரம் மற்றும் குளியலறை இணைப்பு வசதியுடன் கூடிய 10×12 அடி பரப்பளவு கொண்ட அறையும் உள்ளதாக ஒவ்வொரு அறைத்தொகுதியும் விளங்கும்.
* ரூ. 30,000 வழங்கும் நன்கொடையாளரின் பெயரில் 320 சதுர அடி கட்டிட பரப்பளவு கொண்டதாக இவ்அறைத்தொகுதி விளங்கும். நன்கொடையாளர் விரும்பி, 8 அறைத் தொகுதி களைக் கொணட ஒரு தனிக்குடிலுக்கு ரூ. 2 4 இலட்சமும், 4 அறைத் தொகுதிகளைக் கொண்ட ஒரு தனிக்குடிலுக்கு ரூ. 1.2 இலட்சமும், 2 அறைத் தொகுதிகளைக் கொண்ட ஒரு தனிக்குடிலுக்கு ரூ. 60,000-ம் வழங்கினுல், அவை கட்டித் தரப்படும்.

## ராம் பகீச்சா விருந்தினர் விடுதி திட்டம்

கோயிலுக்கு வடகிழக்குப் பக்கத்தில் இந்த விருந்தினர் விடுதி கட்டப்படும். இவ்விடுதி முன்று தளங் களையும், ஒவ்வொரு தளமும் 50 அறைத் தொகுதிகளையும், ஒவ்வொரு அறைத்தொகுதியும் 600 சதுர அடி கட்டிடப் பரப்பளவில் விளங்கும்படியாக 14×18அடி என்ற பரப்பளவில் உள்ள அறைகளையும் கொண்டு விளங்கும். மேலும் ஒரு பொதுத் தாழ்வாரமும் கொண்டு விளங்கும்.

* ஒவ்வொரு அறைத்தொகுதிக்கும் நன்கொடையாளர் ரூ. 60,000 வழங்கவேண்டும்.

## ஸப்தகிரி தர்மசாலை

ரூ. 8.5 கோடி செலவில் "ஸப்தகிரி சத்திரங்கள்" எனும் பெயரில் இம்மாபெரும் திட்டம் மேற் கொள்ளப்படும். ஒவ்வொரு அறைத்தொகுதியும் ரூ. 80,000/- செலவில் கட்டப்படும்.

ஆகும் செலவில் ரூ. 40,000/- நன்கொடையாளர் வழங்கினுல், அவ்வறைத்தொகுதி அவருடைய பெயரில் அமையும்.

## பலன்கள்

நன்கொடையாளர்கள் வருடத்தில் 60 நாட்களுக்கு இலவசமாக அவருடைய நன்கொடை அறைத் தொகுதியில் அல்லது குடிலில் தங்கலாம். ஆனுல் இந்தச்சலுகை நிறுவனங்களுக்கும், வாணிகக் கழகங் களுக்கும் 15 வருடங்களுக்கு மட்டுமே அளிக்கப்படும்.

* இத் தங்குவசதி ஒதுக்கீடுகளின் போது நன்கொடையாளர்களின் உற்றூர் உறவினர்களுக்கு முன்னு ரிமை வழங்கப்படும்.
* ஒவ்வொரு அறைத்தொகுதி அல்லது குடிலிலும் சம்பந்தப்பட்ட நன்கொடையாளர்களின் பெயர்ப் பலகைகள் நிரந்தரமாகப் பொருத்தப்படும்.

மேற்படி திட்டங்களில் பங்கேற்க விரும்பும் நன்கொடையாளர்கள் அதற்கான தொகையினைச் "செயலாட்சித் தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி." எனும் பெயரில் காசோலை மூலமாகப் பெற்று, தேவையான தகவல்களுடன் கூடிய கடிதத்துடன் இணைத்து அவற்றை, "தலைமை கணக்கு அலுவலர் தி. தி. தேவஸ்தானம் திருப்பதி" எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும்.

மேலும் விவரங்களுக்கு "செயலாட்சித்தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

செயலாட்சித் தலைவர்.

" தரும் பொருள் சிறிதே; பெறும் அருள் பெரிதே "

# மதுராந்தகம் ஸ்ரீதேவி

திரு. அ. நடராஜன்,
திருப்பதி.



ஸ்ரீதேவி மூலவர்

அருமை நண்பர் வேங்கடாசலம் அவர்கள் தாம் அறிந்த தெய்வீக மனிதர் மதுராந்தகம் தேவிதாஸன் பற்றியும், அவர் புதிதாகக் கட்டிக் கண்ணும் கருத்துமாய்ப் பாதுகாத்து மக்கள் துயர் நீங்கி நல்வாழ்வு பெறப் பூசித்து வரும் ஸ்ரீவைஷ்ணவி தேவியின் திருக்கோயில் குறித்தும் என்னிடம் அடிக்கடி கூறியது என் ஆர்வத்தைத் தூண்டியது. 'ஏரி காத்த இராமன்' கோவிலையும் தரிசிக்க வேண்டும் என்னும் அவாவும் எனக்கிருந்தது. எனினும், என்ன காரணத்தாலோ அவருடன் அங்குச் சென்று வணங்கி வழிபடும் பேறு பல காலம் எனக்குக் கிட்டவில்லை.

எனக்கும் தேவி கருணை புரியத் திருவுள்ளம் கொண்டாள் போலும்! ஒரு நாள் மாலை இரண்டொரு நண்பர்களுடன் வீட்டில் அளவளாவிக் கொண்டிருந்த போது, நண்பர் வேங்கடாசலம் 'மதுராந்தகம் ஸ்வாமி அவர்கள் வருகிறார், குடிப்பதற்கு நல்ல தண்ணீர் அவருக்கு வேண்டும்' என்று கூறியபடி உள்ளே நுழைந்தார். ஸ்வாமி என்றால் நம்மிலும் மாறுபட்டதோற்றமுடையவராகவே இருப்பார் என்று எண்ணினேன். ஆனால், என்ன வியப்பு! நம்மைப் போன்ற சாதாரண உடை, நெடிதுயர்ந்த உருவம், ஒளி வீசும் திருமுகத்தில் 'பளிச்' என்ற ஸ்ரீசூர்ணம், இதழில் புன்னகை துலங்கப் பின்னால் வந்தவர்தாம் அந்த ஸ்வாமி. அதுதான் முதல் அறிமுகம்.

அடுத்து மதுராந்தகம் சென்ற சமயம் இரவு வேளை. தேவிதாஸன் ஸ்வாமியும் ஊரில் இல்லை. ஸ்ரீதேவியின் தரிசனம், கோவில் பற்றிய ஒரு பொது வரிவடிவம் இவற்றுடன் மட்டுமே நான் மனநிறைவு பெற வேண்டியதாயிருந்தது. ஆனால், அக்கோயில் பற்றிய சிறப்புச் செய்திகள் எவையும் தெரியாமலேயே, சற்று ஏமாற்றத்துடனும் ஏக்கத்துடனும் திரும்ப வேண்டியதாயிற்று.

ஸ்ரீதேவியின் கருணைமிகு திருமுகம், சந்நிதியில் இருப்பவரை மெய் மறக்கச் செய்து இறை உணர்வினில் ஒன்றச் செய்யும் தெய்வத்திருவுருவின் திவ்விய எழிற்காட்சி—அலைபாயும் மனத்தை அமைதிப்படுத்தும் தெய்வீகச் சூழல்—இவை மீண்டும் மீண்டும் மனத்தில் காட்சியளித்து ஆர்வ மூட்டின என்பது மட்டும் உண்மை. மீண்டும் மதுராந்தகம் சென்றோம்.

ஃ ஃ ஃ

மதுராந்தகம் பேருந்து நிலையத்திலிருந்து தேசிய நெடுஞ்சாலையில் தெற்கு நோக்கிச் சிறிது நடந்து கிழக்கே திரும்பினால் தேரடித் தெரு. சற்றுத் தொலைவு சென்றபின், கருவறையின் மேலுள்ள விமானம் மூன்று கலசங்களுடன் சந்தன நிறத்தில் உயர்ந்து தோன்றுகின்றன. பத்தடிகள் தாண்டியவுடன் தெறகு நோக்கி 'ஸ்ரீ தேவி சரணம்' என்ற வளைவுடன் காணப்படுவதே ஸ்ரீதேவியின் திருக்கோயில்.

தேவிதாஸன் நம்மை மலர்ந்த முகத்துடன் வரவேற்று உள்ளே அழைத்துச் செல்கிறார். மேல் நோக்கிப் பார்க்கிறோம். போர் துவங்குமுன் மனம கலங்கி நின்ற அர்ச்சுனனுக்குத் தேரோட்டியாய் இருந்து பார்த்தசாரதி கீதோபதேசம் செய்யும் திருக்காட்சி. அதற்கும் மேலே ஸ்ரீதேவியின் அமர்ந்த திருக்கோல வடிவம் நின்றபடியே, உலகச் சூழலைச் சற்று மறந்து, தெய்வீகச் சிந்தனை நம் மனத்தை மெல்ல ஆட்கொள்வதை உணர்கிறோம். இடது புறம் துளசிச் செடிகளுக்கிடையில் நாகர் சிலைகள். வலதுபுறம் செம்பருத்தி, நந்தியாவட்டை, முல்லை மலர்ச் செடிகள்.

துளசிச் செடிகளைத் தாண்டி இடது புறமாக மேலே கோவிலுக்குச் செல்லும் படிக்கட்டுகள். ஆம், கோவில் முதல் தளத்தில்தான் அமைந்துள்ளது.

படியேறி நுழைந்து வலதுபுறம் திரும்பியவுடன் கண்ணைக் கவரும் வண்ணத்தில் காட்சி தருபவர்கள் திருப்பதி வெங்கடாசலபதியும் அலர்மேல் மங்கையான பத்மாவதித் தாயாரும். அவர்களை வணங்கிவிட்டு இடதுபுறம் திரும்பினால் வலது கைப் பக்கத்தில், பாமர மக்களின் குறைகளைப் போக்கவே அனவரதமும் பகவானை வேண்டி அடியார்களுக்காகப் பிரார்த்திக்கும் வண்ணம், அஞ்சலி ஹஸ்தமாகக் கூப்பிய கரங்களுடன் முகடு வரை நெடிய தோற்றத்துடன் நிற்பவர் 'சிறிய திருவடி' எனப் புகழப் பெறும் ஆஞ்சநேயர். அடிய

வர்களின் வேண்டுகோள்களை நிறைவேற்றி வடைமாலை அணிந்து மகிழ்கிறார். அருகில் ஜய மாருதி அஷ்டோத்திர நாமாவளி எழுதி வைக்கப்பட்டுள்ளது. பக்தர்கள் சொல்லிப் பயனடையலாம்.

இடது புறம் சற்றே குட்டையான நிலைப்படியுடன் 'தியான அறை' கண்ணில் படுகிறது. இதைப் பின்னால் காணபோம்.

ஃ ஃ ஃ

அனுமனைத் தரிசித்துக் கொண்டு மேலே சென்றால் தேவியின் உறைவிடமான 'மணித்தீப ஸ்ரீ நகர'த்தின் மணிக்கதவங்கள் பக்தர்களுக்காகத் திறந்துள்ளன.

உள்ளே நுழைந்து வலமாகவே வருவோம். இடதுபுறம் விஷ்வக்ஸேனர் என்னும் தும்பிக்கையாழ்வார் வடக்கு நோக்கி வீற்றிருக்கிறார். மேலே சுவரின் மீது ஸ்ரீதேவி, பூதேவி தலை மாட்டிலும் கால் மாட்டிலும் அமர்ந்திருக்க, பாம்பணை மீது பள்ளி கொண்ட ஸ்ரீ ரங்கநாதர். அடுத்து, கிழக்கு நோக்கி சேஷ வாகனத்தின் மீது ஸ்ரீ தேவி தரிசனம். அதற்கடுத்தாற்போல் ஸ்ரீதேவி ஸ்ரீமந் நாராயணன் ஆகியோரின் திருக்கல்யாணத் திருச்சேவை. அதையடுத்து சிம்ம வாகனத்தின் மீது ஸ்ரீதேவியின் திருக்காட்சி.

இப்போது கருவறை அருகினில் காட்சியளிக்கிறது. எட்டுப் பக்கங்களுடன் கூடிய அமைப்புள்ளது. இம்மாதிரியான அமைப்புடன் விளங்கும் கோவில் கருவறைகள் இந்தியாவிலேயே இரண்டே உள்ளன என்றும், தென்னிந்தியாவில் இது போன்ற கருவறை எங்கும் கிடையாது என்றும் சொல்லப்படுகிறது.

ஸ்ரீதேவியின் கருவறைக்குச் செல்வதற்கான எட்டுப்படிகளிலும்கூட ஒரு தனிச் சிறப்பு உண்டு. இவை அஷ்ட சித்திகளைக் குறிப்பனவாம். ஒவ்வொரு படியின் இருபுறத்திலும் 'யந்த்ரங்கள்' பொருத்தப்பட்டு ஊடே உலோகக் கம்பியினால் இணைக்கப்பட்டுள்ளன. எனவே, முறையான உடுப்புடனேயே, அதாவது, சட்டை எதுவுமின்றி, இடுப்பில் கட்டிய மேல் துணியுடனேயே பக்தர்கள் துணியுடனேயே பக்தர்கள் மேலே ஏறிச் செல்ல அனுமதிக்கப்படுகின்றனர். படி வரிசையின் இருபுறங்களிலும் மேலே துவார பாலகிகள். மூலவர் சிலாபேரம். ஸ்ரீ சக்ர பிரதிஷ்டை. வலது காலை மடித்து, இடது காலை தொங்கவிட்டுக் கொண்டு இருக்கும் அமர்ந்த திருக்கோலம். தெற்கு நோக்கிய திருமுகம். வலதுமேல் கையில் சக்கரம், இடதுமேல் கையில் சங்கு.வலது கீழ்க்கை அபய முத்திரையுடனும இடது கீழ்க்கை வரத முத்திரையுடன் கூடியது. கருணை பொழியும் திரு விழிகள். புன்னகையுடன் கூடிய திருவதனம. உற்சவமூர்த்தி பஞ்சலோகத்தால ஆகியது. வேணடுவோர்க்கு வேண்டுவன எல்லாம் வழங்கும் வரப்பிரஸாதி.

தினமும் மூன்று கால பூஜை. பவுர்ணமி நாட்களிலும் நவராத்திரி போன்ற சிறப்பான நாட்களிலும் அபிஷேகம். வெள்ளிக்கிழமைகளில் உற்சவ மூர்த்திக்குத் திருமஞ்சனம். விஷு புண்ணிய காலம், தைப்பூசம், நவராத்திரி ஆகியவற்றின்போது விசேஷ பூஜைகள், லட்சார்ச்சனைகள் நடைபெறுவது ஒரு தனிச் சிறப்பு.

தாயாரின் திருநாமம் 'அஷ்டலக்ஷ்மி ஸௌந்தர்ய மந்த்ர பீடேச்வரி ஸ்ரீ தேவி'. ஸ்ரீ வைஷ்ணவி தேவி, ஸ்ரீ ராஜராஜேஸ்வரி என்னும் பெயர்களும் உண்டு. லலிதா சஹஸ்ர நாம, லலிதா அஷ்டோத்தர சத நாம அர்ச்சனைகள் செய்யப்படுவது மற்றொரு சிறப்பு.

ஸ்ரீ தேவியின் சந்நிதிக்கு நேர் எதிரே 'பெரிய திருவடி'யான கருடாழ்வார். அதற்குப் பின்னால் சற்றுத் தள்ளி பலிபீடமும் ஹோம குண்டமும் அமைந்துள்ளன.

ஸ்ரீ தேவியைத் தரிசித்தபின் நமது திருவலத்தைத் தொடர்வோம். கிழக்கு நோக்கி யாளி வாகனத்தில் ஸ்ரீதேவியின் திருக்காட்சி.

கருவறை எட்டுப் பட்டை வடிவமுள்ளது என்பதை மேலே பார்த்தோம் அல்லவா? கருவறை வாயிலுக்கு மேலே இரு யானைகளின் நடுவில் கொலுவிலிருக்கும் கஜலக்ஷ்மி. வலமாக முறையே அன்னையின் வடிவாய் அமர்ந்து ஆதியில் தோன்றிய ஜகத் ஜோதியான ஆதிலக்ஷ்மி, செல்வம் எனும் மூலப்பொருளமர்ந்த தனலக்ஷ்மி, உயிரினம் காக்க உணவளித்திடும் தான்ய லக்ஷ்மி, பிள்ளைச் செல்வம் வழங்கிடும் சந்தானலக்ஷ்மி, அச்சத்தை அகற்றிடும் வீரலக்ஷ்மி, என்றும் எதிலும் வெற்றியையே நல்கும் விஜயலக்ஷ்மி, கல்வியைக்கலைச் செல்வமாய் அமைத்த வித்யாலக்ஷ்மி அமைந்திட அஷ்ட ஐசுவர்யங்களையும் அள்ளித் தருபவர்களாய் வீற்றிருக்கின்றனர்.

கருவறையை வலம் வந்து மேலே செல்லுகையில் மேற்கு நோக்கி ஹம்ஸ வாகனத்தில் காட்சி தரும் ஸ்ரீ தேவி, யானை வாகனத்தின்மீது அமர்ந்து சேவை சாதிக்கும் ஸ்ரீதேவி, கமல வாகனத்தில் பத்மாவதியாகக் காட்சி தரும் ஸ்ரீதேவி, கருட வாகனத்தில் ஸ்ரீதேவியின் எழிற்கோலம் ஆகியவை கண்ணிற்கும் கருத்திற்கும் விருந்தாய் விளங்குகின்றன. சற்றே வலது புறம் திரும்பினால், மணிகண்டன், சகலரையும் காத்து ரக்ஷிக்கும் சாஸ்தா அய்யப்பனின திருப்படிமம் யோக பட்டயத்துடன் நம்மையறியாது வணங்கச் செய்கின்றது.

வீரன் தாங்கும் வீரன் ஏறியிருக்கும் குதிரைகளுடன் கூடிய தூணகள, அலங்காரத் தூணகள் ஆகியவற்றுடன் கூடிய மகாமண்டபம் எழிலுடன் விளங்கும எடுப்பானதோர் அமைப்பு.

ஸ்ரீஜகன்மாதாவின் நவசக்தி வடிவங்களில் ஸ்ரீ வைஷ்ணவி திருப்படிமம் திருச்சுற்றின் மேற்குப்புறச் சுவரிலும், ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் சிலை கிழக்குப் புறச்சுவரிலும் அமைக்கப்பட்டுள்ளன. ஏனைய ஆறு சக்திகளின் திருப்படிமங்களும் அமைக்கப்படவிருக்கின்றன. தவிரவும, வைணவத்தின் மாபெரும் குருவாய் விளங்கி, இந்து சமயத்திற்கு அரிய சேவை புரிந்த ஆசாரியர் ராமானுஜருடைய திருப்படிமமும் பிரதிஷ்டை செய்யப்படவுள்ளது.

திருக்கோயில் தரிசனத்தை நிறைவு செய்து கொண்டு, முன்கூறிய,'தியான அறை'யினுள் நுழைவோம். அங்கேதான் தேவிதாஸன் அவர்கள் சிறப்பாகப் பவுர்ணமி நாட்களில் பூஜை முடிந்த பின்னர் அடியார்களின் குறைகளைக் கேட்டு, அவற்றைக்களைவதற்கான வழிமுறைகளை ஸ்ரீதேவியின் அருள் வாக்கின் துணைகொண்டு எடுத்துச் சொல்லுகின்றார். தெற்குப் பார்த்த அலமாரி ஒன்றில் லக்ஷ்மி யந்த்ரம், ஸ்ரீசக்ரம், ஷண்முக யந்த்ரம் ஆகியவைகளுடன் தாமே தமது உபாஸனையின் ஆரம்ப நாட்களில் வரைந்த

(48-ம் பக்கம் பார்க்க)

சென்ற இதழ்த் தொடர்ச்சி

# வைணவ வினா - விடை

வித்வான் ஸ்ரீ. உ. வே. தஞ்சை என. எஸ். தாதாசாரியா

மந்தனுருபமந்தனத்திலும், ஹேமாத்ரியன் விரத காண்டத்திலும் பிற்காலத்திய உருவ அமைப்புகளைக் காணலாம். இவைகளுக்கு விளக்கமும் இருக்கும் பாஞ் சராத்திரம்—ஆயசீர்ஷத்தில் முக்கியமாக 4 திருக்கை களின்அமைப்பும் சிறப்பும்கொண்ட திருமால்திருவடி வங்கள் கூறப்பட்டிருக்கும் அவைகளில் வலப்பக்கம் உள்ள மேல் திருக்கையில், சக்கரமும், கீழ்க்கையில் தாமரையும் இருக்கும். இடப்பக்கம் உள்ள மேல் திருக்கையில் கதையும் கீழ்திருக்கையில் சங்கும் இருக்கும்.

கருவறை ஆஸ்தானத்தில், உபயநாச்சிமார் களாய் இந்தத்திருமாலின் இருபக்கத்திலும், ஸ்ரீயும் புஷ்டியும் கையில் தாமரை மலர்களுடன், திருமா லின் திருத்தொடை அளவில், சற்றுச் சாய்ந்த கோலத்தில் எழுந்தருளி இருப்பார்கள். (திருவரங் கத்தில் மட்டும் உபயநாச்சிமார்கள் அமர்ந்திருப்பது அரங்கனின் திருவடி வருடிக்கொண்டிருக்கும் "பாவனை" எனவும் சொல்வார்கள்) திருமாலின் திரு முடிக்குப் பின் பிரபையின் வடிவங்களோ அல்லது சித்திரங்களோ இருக்கும். தாமரை வடிவுள்ள பீடத்தில், திருமால் நின்ற திருக்கோலத்தில் தரி சனம் தருவர்.

வடநாட்டில் "வியூகம்" என்றழைக்கப்படும் திருப்பாற்கடல் நாதன் ஆயுதங்களை ஏந்தியகோலத் தில் காணபிக்கப்பட்டிருப்பர். சில இடங்களில் வியூ கத் திருமால் வடிவம், நான்கு திருமுகங்களுடன் இருப்பதாக இந்தியாவின் வடகோடிப்பகுதியில் காணப்படும். அவைகளில் சில 8 அல்லது 12 திருக் கைகளுடன் இருக்கும். இவை குஷானகாலம் தொடங் கிச் சிற்சில மாறுதல்களுடனும் கவர்ச்சியுட னும் இருக்கும்.

விஷ்ணு தர்மோத்தரத்தில் கருடன் மேல் பெரு மாள் வீற்றிருந்து, நான்கு திருமுகங்கள், எட்டு கைகளுடன் காட்சி தருவர் எனவும் கூறப்பட்டுள்ளது. இந்த நான்குத் திருமுகமண்டலங்களில் கிழக்குமுகம் சற்றுச் சாந்தமுள்ளதாகவும், தெற்கு முகம் நரசிங்க மாகவும், பின்பக்க முகம் கபிலமாகவும், வடக்குப் பக்க முகம் வராக முகமுள்ளதாகவும் இருக்கும்.

முற்காலத்தில், வீற்றிருந்த திருக் கோலத்தில் உள்ள திருமால் ஆலயம் மிகவும் குறை வாம். அவ்வாறு வீற்றிருந்த திருக்கோலத்தில் உள்ள சிலவடிவங்கள ஆதிசேஷன் அல்லது கருடன் அல்லது தாமரை இவைகளில் அமர்ந்திருக்கும் அமைப்பிலி ருக்கும். மிகப்பழைமையான தேவ்காட் கோயிலில் உள்ள விக்கிரங்கள் ஆகம முறைப்படியும் இருக்கும்.

பீஹாரிலிருந்து கொண்டு வரப்பட்ட,கல்கத்தா பொருட்காட்சியில் உள்ள மிகவும் பழைமையான திருமால் வடிவங்கள் கருடன்மேல் அமர்நத வண் ணம் இருக்கும்.

மற்றும் உமாமகேசுவர மூர்த்தி போல் சில திருமால் வடிவங்களும் பழங்காலத்தில் இருந்தன. அவை தன் இடது திருவடியை மடித்து, அத்திருவடி யை ஆசனத்தில் மேல் அமர்த்தித் திருத்தொடையில் திருமகளை அமர்த்திக் கொண்டும், சில பிம்பங்கள் அமர்த்திக் கொள்ளாமலும் இருக்கும். வடஇந்தியா தேவகாட் கோயிலில் எழுந்தருளியிருக்கும் அரங் கன் மிகப் பழைமையானவர்.

தென் இந்தியாவின் சரித்திரப் பகுதியிலிருந்து, சிற்பகாலக் குறிப்புகள் சில தெரியவரும். அவையா வன:கி.பி.600 முதல் 1600 வரையில் பல்லவர் காலம் முதல் சிவ, விஷ்ணு சிற்ப காலங்களாகும். அவைகளை நான்கு பகுதிகளாகப் பிரித்தால் (250 ஆக)பல்லவர், முற்காலச்சோழர், பிற்காலச்சோழர், விஜயநகரமன் னர் என்ற நான்கு மன்னர் காலங்களில் சிற்பங்கள் வளர்ச்சி பெற்றன எனலாம்.

தமிழ்ச்சங்க காலத்திலிருந்தே நால்வகைத்திணை களில் முதலாவதாக முல்லை நிலத்தைப் பிரித்து அம் முல்லை நிலத்துக்குக் கடவுளாகத் திருமாலைத் தமிழர் கள் வேற்றுமை இன்றி வழிபட்டார்கள். தொல் காப்பியத்திலும் திருமாலின் பல திருப்பெயர்கள் இருக்க "மாயோன்" என்ற பெயர் சிறப்பாகக்குறிப் பிடப்பட்டுள்ளது. "மாயன்" என்பதற்கு விசித்ர மான எவராலும் புரிநதுகொள்ள முடியாத அற்புத மான திவ்ய அருள்மிகும் சேஷ்டிதங்கள் உள்ளவர் என ஸ்ரீவைணவ ஆசார்யர்கள் விளக்கம் தருவர். திருமகளுடன் என்றும் கூடியவர் எனவும் விளக்குவ துண்டு.

"கலித்தொகை"என்ற சங்கநூலில் 104 பாடல் களில் திருமாலின் திருவுருவம்பற்றிக் கூறப்பட்டுள் ளது. திருமால் பொன் வடிவமுள்ளவர், கையில்

சக்கரம் தாங்கியவர், திருமார்பில் திருமகளொடு கூடியுவர் என்றும் உரைக்கப்பட்டுள்ளது. 103-ம் பாடலில் திருமால் கம்சனல் ஏவப்பட்ட, குதிரை முகம் கொண்ட "கேசி" என்ற அசுரனை மடித்தவர் எனவும், 105 ம் பாடலில் அவர் பாம்பணையில் அரிது யில் புரிபவர் என்றும் பணிக்கப்பட்டுள்ளது.

எட்டுத்தொகை நூல்களில் ஒன்ருன பதிற்றுப் பத்திலும திருமால் திருமேனி அடையாளங்கள் உரைக்கப்பட்டுள்ளன.

பரிபாடல் என்ற சங்கநூலில் திருமாலைப்பற் றிய எட்டுப் பாடல்களில், திருமாலின் திருக்குணங் கள், ஆயுதங்கள், அவர் எல்லோர் உள்ளத்திலும் அந்தர்யாமி என்ற பெயரில் எழுந்தருளியிருப்பவர் என்பன போன்ற குறிப்புகள் உண்டு.

ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்ருன சிலம்பில், "திருமால் சீர் கேளாத செவி என்ன செவியே" என வும், "நாராயணு என்னு நாவென்ன நாவே" என்றும் திருமால் புகழ் பேசப்படுகிறது.

ஆழ்வார்களின் காலத்திலே, 12 பேர்களாட ஆழ்வார்கள் முழுக்க முழுக்கத் திருமாலின் புகழ் அனைத்தையும் பல படியில், அமுதப் பெருக்கெடுத் தாற்போல் அருளிச் செய்தார்கள். இதனல் இவர் கள் பாலேய் தமிழர் எனப்பட்டார்கள்.

கடல் கடநத நாடுகளான சீன, ஜப்பான் இவைகளில் திருமால் பௌத்தராக வீற்றிருக்கிருர். ஜப்பானில் இந்தப் பௌத்த மதம் புகும்முன் ப்ராம மணுக்யோ என்ற மதம் இருந்தது. அப்பொழுது ஜப்பானியர்கள் நேரிடையாகவேத் திருமாலையே சிறப்பாக வழிபட்டார்கள்.

(தொடரும்)

---

லக்ஷ்மி, சரசுவதியுடன் கூடிய ராஜ ராஜேச்வரி திருவுருவப் படத்தைப் பூஜித்து வருகிருர்.

சாதாரண ஆள் தேவிதாஸனை மூகிழ்த்தது ஒரு சுவையான கதை. ஒன்றரை வயதிலேயே தயை இழந்த அவர், கும்பகோணத்தில் தாய் வழிப் பாட்டி வீட்டில் வளர்ந்தார். கும்ப கோணத்தில் படிக்கும்போது ஓவிய மும் பயின்ருர். அப்போது கும்ப கோணத்தில் நாடக விற்பன்னரான நவாப் ராஜ மாணிக்கம் தமது குழு வினரைக் கொண்டு நாடகங்கள் நடத்தி வந்தார். அவர் ஒரு தேவி பக்தர். தினந்தோறும் காலையில் நியமத்துடன் தேவி பூஜை செய்வது அவர் வழக்கம். அதைப் பார்ப் பதற்கு தேவிதாஸரும் செல்வதுண்டு. நாமும் தேவி பூஜை ஏன் செய்யக் கூடாது என்று நினைத்தார் அவர். அப்போது சைவ அடியார் ஒருவர் தேவி உருவத்தை ஓவியமாக வரைந்து பூஜை செய்தால் நல்லது என்று கூற, ஓவியக்கலை பயின்றிருந்த தேவி தாஸர் அங்ஙனமே தேவியின் படம் வரைந்து முறையாகப் பூஜை செய்யத் தொடங்கினர்.

இதற்கிடையில் சபரி மலை யாத் திரையை மேற்கொண்ட தேவி தாஸ ருக்குப் புனலூரைச் சேர்ந்த சுப்பிர மணியம் (சாஸ்தானந்தர்) என்பவ ரின் அறிவுரை கிடைத்தது.அவரைக் குருவாகக் கொண்ட தேவிதாஸரின் ஆன்மீகப் பயிற்சி தீவிரமாயிற்று. தேவிதாஸர் பூஜை செய்யும் ராஜ ராஜேஸ்வரிப்படத்தில் சிரசு, இதயம், பாதம் இவற்றுக்குப் பின் மூனறு விசேஷ யந்த்ரங்களைப் பொருத்தி பூஜை செய்யலானர் தேவிதாஸர். தெய்விக சித்தி ஏறபட்டது.

மதுராந்தகத்தில் தகப்பனர் காலத்திற்குப் பிறகு தேவி தாஸர் தங்கி, தமது பூர்விக வீட்டின் முன் பகுதிக் கீழறையில் தமது பூஜையைத் தொடர்ந்தார். பல்வகைத் துயர் களினுலும் பிணிகளினுலும் வருந்திய மக்களுக்கு அவர் தேவியின் அநுக்ர ஹத்தினல் உதவி புரியத் தலைப் பட்டார்.

1958 ஆம் ஆண்டு வாக்கில் தாம் பூஜித்து வரும் ஸ்ரீதேவிக்கு ஒரு கோயில் எழுப்ப எண்ணினர். தனி யாகக் கோவிலுக்கென நிலம் ஒதுக் கப்பட்டது. ஆனல், பல கார ணங்களினல் அது கிடைக்காது போயிற்று. ஸ்ரீதேவியிடம் முறையிட்டபோது 'உமது வீட்டிலேயே எனக்குக் கோவில் அமைக்கவும்' என உத்தரவு ஆயிற்று. ஒரு புறம் மகிழ்ச்சி, மறுபுறம் ஐயம்; ஏனெனில், அது பூர்விக வீடு. தமது வழித்தோன்றல்கள் என்ன சொல்லக் கூடுமோ என அஞ்சியவராய், மகன் கள் எல்லாரையும் அழைத்து விவரத் தைக் கூறினர். அனைவரும் ஒரு மன தாகத் தங்கள் உரிமைகள் அனைத் தையும் ஸ்ரீ தேவிக்கு அர்ப்பணித்து விடுவதாய் வாக்களித்ததோடுகூட, தங்களால் இயன்றவரை திருக் கோயில் பணிக்குப் பொருள் ஈட்டித் தருவதாக உறுதி கூறினர்கள்.

1975இல் கோயில் கட்டும் திருப் பணி துவங்கியது என்ருலும் எத் தனையோ இடையூறுகள், சிரமங்கள். எனினும், காஞ்சிப் பெரியவர்கள், சிருங்கேரிப் பெரியவர்கள் போன்ற மகான்களின் அருளினுலும் சிற்பக் கலை வல்லுனர் கணபதி ஸ்தபதி அவர்களின் மேற்பார்வையிலும் உலக நாயகியின் திருக்கோயில் உருப் பெற்று, 1983இல் குடமுழுக்கும் நடந்தேறியது. இறையன்பர்கள் வந்து ஸ்ரீதேவியின் தரிசனம் பெற்று, தங்கள் கவலைகள் யாவும் தீர்க்கப் பட்டு மகிழ்ச்சியுடன் செல்வதைப் பார்க்கும்போது, இந்திய மணணில் வேரோடியிருக்கும் இறைமாண்பு இம்மியளவும் இனறும் குறைவில்லை என்னும் கருத்தே எழுகின்றது.

நாம் வாழ்க்கை நலங்கள் பெற, நமது பிறப்பு பொருளுடையதாக ஆக, ஸ்ரீ தேவி சரணம் ஸ்ரீ சந்நிதா னம் சென்று, மணித்வீப ஸ்ரீநகரத் தில் அருளாட்சி நடத்தும் அஷ்ட லக்ஷ்மி ஸௌந்தர்ய மந்த்ர பீடேச் வரியான ஸ்ரீதேவியைத் தரிசிகக ஒரு நடை சென்று வருவோமே!

பொன்னரசி நாரணனர்தேவி புகழரசி
மின்னு நவரத்தினம்போல மேனி
யழகுடையாள்
அன்னையவள் வையமெல்லாம்
ஆதரிப்பாள் ஸ்ரீதேவி
தன்னிரு பொற்ருளே சரண் புகுந்து
வாழ்வோமே.
—மகாகவி பாரதியார்.

*

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

